


بسم الله الرحمن الرحيم

# அல்கலாம்

# AL-KALAM

பத்திராதிபர் :—கூ. அ. அப்துல் மஜீத்.

| வால்யூம். 3 | 1926ஆ ஜனவரிமீ | பகுதி. 1 |
|---|---|---|


## கிலாபத்தியக்கம்.

ஆரம்ப காலமுதற்கொண்டு முஸ்லிம்களுக்கு சோதனை கஷ்ட நிஷ்டூரங்களின் வாயிலை அல்லாஹுதஆலா திறந்துவைத்திருக்கின்றான். முஸ்லிம்கள் துன்பத்திற் காளாகாத நேரம், நாள் வருடம் நூற்றாண்டு கிடையா. ஒவ்வொரு முஸ்லிமும், முஸ்லிம்களின் வகுப்பும் பற்பல சங்கடத்திற் கிரையாவது சகஜமாயிருந்து வருகிறது. குறிப்பிட்ட இடம் முதற்கொண்டு உலகமுழுவதிலும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களைப் பின்பற்றி யிருப்போர் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நவீனகஷ்டத்திற் காளாகாமலிருப்பதில்லை. பலநூற்றாண்டுகளுக்கு முன் அரேபியாவில் தோன்றிய நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் "அல்லாஹுதஆலா ஒருவனே" என்னும் சப்தத்தை யுயர்த்தி உலகின் ஒவ்வொரு அணுவிலும் மாறுதலை யுண்டுபண்ணினார்கள். அநியாயத்தின் இருள் சூழ்ந்திருந்த விடங்களில் ஏகதெய்வக் கொள்கையின் பிரகாசத்திற்கு முடிவில்லாத ஆதிக்கத்தை உண்டுபண்ணினார்கள். அல்லாஹுதஆலாவின் இத்தகைய கடாக்ஷத்தின் மத்தியிலும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் விசுவாசிகளுக்கு சுகம், உல்லாசம் ஆகியவைகள் பெரும் அரிதாகவே யிருந்தன,

முஸ்லிம்களுக்கு ஆக்ஷியும் அதிகாரமுமிருந்தன. இவர்களுக்குப் பெரும்பொக்கிஷமும் அளவற்ற செல்வாக்கு மிருந்தன. முஸ்லிம்களுள் கல்வியும் அறிவும் அலையைப்போல் உயர்ந்துகொண்டிருந்தன. சுயேச்சை சுயமதிப்பின் ஒருக்ஷுமுத்திரமும் இவர்களிட மிருந்தது. மனிதர்களின் மீதுள்ள அனுதாபம் முஸ்லிம்களிடம் பூரணமாயிருந்தது. ஒரே ஆண்டவனை வணங்கும் முஸ்லிம்களின் நற்செய்கை உலகெல்லாம் ஆதிக்கம் செலுத்தியது. ''கங்கா'' நதிமுதல் ''கீரூன்'' நதிவரையில் அப்துர்ரஹ்மான் அவர்களின் சைன்னியங்கள் நிறைந்து கிடந்தன. இச் சைன்னியங்கள் பிரான்ஸின் ஹிருதயத்தைக் கூட சூழ்ந்துகொண்டிருந்தன. கங்கா நதியின் அலைகள் டன்யூப் கரை வரை 'அல்லாஹு அக்பர்' என்னும் ஐந்து வேளையினோசையை வானத்தை அளாவச் செய்துகொண் டிருந்தன. தெய்வம் ஒன்றே என்னும் பறை முழுஉலகிலும் சாற்றப்பட்டு வந்தது. நாடெங்கும் நபித்துவத்தின் பிரசங்கங்கள் புரியப்பட்டுவந்தன. ஆனால் ஒரேநாயனை வணங்கிவந்த முஸ்லிம்களுக்கு சௌகரியமென்பதே கிடையாது.

அல்லாஹுத ஆலாவைமட்டும் விசுவாசித்துவந்த ஒவ்வொரு நபருக்கும் கஷ்டநிஷ்டூரங்களின் புயல்காற்று உரித்தாக இருந்தது. கிருஸ்தவ உலகத்தோர் ஒருபுறத்திலும் பூமியின் முஷ்ரிக்குகள் மற்றொருபுறத்திலுமிருந்து முஸ்லிம்களை ஹிம்ஸித்து வந்ததோடுமட்டுமின்றி முஸிலிம்களுக்குள்ளேயே பற்பலநூதனக்கொள்கைகள் பெரும் அநீயாயப் போர்புரிந்துவந்தன. உண்மைமுஸ்லிம்கள் பெரும் சோதனைக் காளாவதற்குக் காரணம் இவர்களின் விதிப்பயனென்றும் உலகம்கருதியது. இஸ்லாம் தோன்றியதுமுதல் ஒவ்வொருநாளும் முஸ்லிம்கள் ஒவ்வொரு பலமுள்ள புதியவிரோதியை எதிர்த்து நிற்க வேண்டியதாக இருந்ததைப் பார்க்கலாம்.

சோதனைக்குரிய இக்கஷ்டங்கள் காலஞ்செல்லச் செல்ல அதிகரித்துக்கொண்டேவந்தன. சிலநூற்றாண்டு களுக்குப்பின் முஸ்லிம்களுள் பலஹீனம் க்ஷீணதெசை ஆகியவைகளின் வித்துக்கள் ஊன்றப்பட்டு வந்தன. மேலும் இஸ்லாமிய எதிரிகளின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டேவந்தது. பிரான்ஸுக்குள் 'தூர்' என்னும் திறந்தவெளியில் இஸ்லாமுக்கு முதலாவதாக அபஜயமேற்பட்டது. இதே கிருஸ்தவர்கள் இஸ்லாமின் மீது விட்டெறிந்த ஆயுதங்களில் குறிதவறாத முதல் ஆயுதமாகும். இந்தயுத்தம் விதைத்த வித்து கடைசியாய் சிலுவையுத்தத்தின் சொரூபத்தோடு வெளியாயிற்று. இதன்மூலமாய் இஸ்லாம் ஓர்பெருங்கஷ்டத்திற் கிலக்காயிற்று. ஆனால் இஸ்லாமை நேசிக்கும் அல்லாஹுதஆலா இஸ்லாமுக்குதவிபுரிந்தான். அல்லாஹுத ஆலாவின் உதவியாகிய 'ஐயூபீ' ஆத்மா பிரகாசித்து கிருஸ்தவ முன்னேற்றத்தின் அலையை அடக்கிற்று.

பிறகு நாஸ்திகக்கொள்கையும், மும்மூர்த்திகளை வணங்கவேண்டுமென்னும் கொள்கையும் மேலஐரோப்பாவைக் கெடுக்கத்தலைப்பட்டன. ஐரோப்பாவின் கீழ்பாகத்தில் உதுமானிய சந்ததிகள் தெய்வம் ஒன்றே என்னும் ஆயுதத்தை உயர்த்தினவர்களாய் சிலாவ்ஜாதிகளின் தேசத்திற்குள் சென்று ஒரேதெய்வக் கொள்கையின் தண்டோராவைச் சாற்றிவந்தனர். கீழரோமாபுரியின் கடைசீ ஞாபகச்சின்னமாகிய கீர்த்திவாய்ந்த கான்ஸ்டான்டிநோபிலும் முஸ்லிம்களை உபசரிக்கும் ஊஞ்சலாயிற்று. 'டன்யூப்' நதியின்கரை முஸ்லிம்களின் உறுதியால் நன்நிலையை அடைந்து கொண்டிருந்தது. ''வியன்னா''வின் சுவர்கள் உதுமானிய வீரர்களின் ஆவேசத்தைக்கண்டு நடுங்கிக் கொண்டிருந்தன. ஆனால் இவ்வுயரிய ஸ்திதிகளும் சிலநூற்றாண்டுகளுக்குப்பின் மாறுதலடைந்துவிட்டன. உதுமானிய கீர்த்தி எவ்விடத்திலிருந்து ஆரம்பமாயிற்றோ? அவ்விடத்திற்கே உதுமானியர்கள் திரும்பிச் செல்லவேண்டியகாலம் தோன்றிற்று.

ஸ்பெயின், கால்யா, போசேனியா, ஹெர்ஸிகோனியா, மாஸிடோனியா, அல்ஜேரியா, தூனிஸ், டிரிப்போலி, எஹிப்து, துர்கஸ்தான் முதலியதேசங்கள் தங்கள் இஸ்லாமை லக்ஷியஞ் செய்யாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டன. 'பாரான்' 'ஹிஜாஸ்' ஆகிய பரிசுத்த ஸ்தலங்கள் மும்மூர்த்தியக்கொள்கையின் அஞ்ஞான உத்திரவுகளுக்குட்பட்டு அநியாயத்திற் கிரையாயிற்று. இருபதாவது நூற்றாண்டு ஆரம்பமானதும் தோன்றிய ஓர்பெரும்புயலின் மூலமாய் முஸ்லிம்களின் ஸ்வாதீனத்தில் எஞ்சியிருந்தவைகளும் நாஸ்திகக் கொள்கையின் அநியாயகரமான கரங்களையடைந்து விட்டன. நேசராஜ்யமென்னும் மேல்நாட்டாரின் அதிக்கிரமத்தில் கிலாபத்துப் பீடமும் சிக்குண்டுவிட்டது. மேல்நாட்டின் தீயோர் கிலாபத்திற்கு விலங்கைமாட்டி கைதிசெய்து விட்டனர். ஹரமைனே ஷரீபைனைச்சார்ந்த ஹாஷிமீ சந்ததியார் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் கீர்த்திக்குரியவைகளை எதிரிகளிடம் விற்க ஆரம்பித்தனர். சிலவெள்ளிக் காசுகளை யபேக்ஷித்து மேல்நாட்டாரின் அடிமையாகி ஜிப்ரயீல் அலைஹிஸ்லாம் அவர்கள் பிரஸன்னமாய்க் கொண்டிருந்த பரிசுத்தஸ்தலத்தைக் கெடுப்பதற்காக முஸ்லிம் உலகத்தாரும் போர்புரிந்

தனர். ஆகவே இஸ்லாமிய பிரதேசங்கள் ஆடையற்று மரியாதை இழந்து போயிற்று. திரேசின் செழிப்பான பூமி,ஸ்மர்ணவின் திறந்த வெளி, அனடோலியாவின் மலைப்பிரதேசங்கள் முதலியன முஸ்லிம் அநாதைகளின் இரத்தத்தால் நனைந்து சிவந்து போயிற்று. கொள் ளைக்காரர்களான கிரேக்கர்கள் முஸ்லிம்களின் இல்லங்களில் பிரவே சித்தனர். இத்தீயோர் இரக்கமற்றவர்களாய் மிருகக்குணம் படைத்த வர்களாய் மனுஷத்தன்மை இழந்தவர்களாய் முஸ்லிம்களின்மீது புரிந்த அநியாயம், அதிக்கிரமம்,படுகொலை ஆகியபிரளயம் இஸ்லாமிய உலகத்தைச் சூழ்ந்து விட்டது. நபிமார்கள் தோன்றிய பரிசுத்த மான தேசம் மும்மூர்த்தியை விசுவாசிக்கும் வெள்ளையர்களின் அசுத் தமான கால்களால் மிதிபட்டு அழுதுகொண்டிருந்தது. இராக், குரு துஸ்தான் ஆகிய தேசங்களை மேல்நாட்டின் எதேச்சாதிகாரம் துன் புறுத்திவந்தது. சிறப்புற்ற அரேபியா மலைப்பாம்பின் வாயில் மாட் டிக்கொண்டிருந்தது. சுருங்கச் சொல்லின் பீரங்கிகளின் குண்டு பிரபோகம் வாள்வீச்சு ஆகியவைகளுக்குட்படாத இஸ்லாமிய தேசமே உலகில் கிடையாதென்று கூறலாம். மேலும் மராக்கோவை ஸ்பெயினிய ஷைத்தான்கள் தாக்கிக்கொண்டிருந்தன. ஆகவேஇஸ்லா முக்கு ஆதரவளிக்கும் அல்லாஹுதஆலாவின் கோபமானது உலகத் தை அழித்துவிடும் நேரம் நெருங்கிவிட்டதாய்த் தோன்றிற்று. ஆயி னும் உலகத்தை இன்றே அழித்துவிடக்கருதாத அல்லாஹுதஆலா இஸ்லாமை மீண்டும் காக்கவேண்டியதாயிற்று.

உடனே மராக்கோ உணர்ச்சியை யடைந்தது. டிரிப்போலி விழித்தது. அரேபியா உசும்பிற்று. துருக்கியர் எழுந்துநிற்க ஆரம் பித்தனர். ஆதலின் இஸ்லாமிய உலகத்தை அநேக வருடங்களாய்ப் பீடித்திருந்த நித்திரை ஒருநொடியில் மறைந்து போயிற்று. ஆப்ரிக் காவின் பாலைவனத்திலுள்ள ஒவ்வொரு அணுவும் 'அல்லாஹு அக்பர்' என்னும் சப்தத்தை உயர்த்திற்று. உல்லாசவாழ்க்கையில் ஈடுபட் டிருந்த எஹிப்தியருள் சுயேச்சையின் இரத்தம் ஓடிற்று. நயவஞ்சக அரபியர்களின் கெட்டகாலம் நெருங்கிற்று. நஜ்திய வீரர்களுக்கு ஆவேசமுண்டாயிற்று. 'ஈரான்' தூக்கத்தை யொழித்தது "ஆப் கன்" பூரணசுதந்தரத்தை அடைந்தது. துர்கஸ்தானின் நிலைமை மாறிற்று. இத்தேசம் ஜனநாயக ஆக்ஷியை கோறிற்று. இத்தகைய புரக்ஷிகாலத்தில் இந்தியமுஸ்லிம்கள் விஷயங்களை அறியாமல் நித் திரைகொண்டிருக்க முடியுமா? இவ்வபார சம்பவங்கள் இந்திய முஸ் லிம்களை விழிக்கச் செய்யாமலிருக்குமா?



'மராக்கோ' கரை முதல் சிந்து நதிவரை ஆதிக்கம்செலுத்திய முற்காலத்து முஸ்லிம்களின் அரிய சரித்திரத்தை எடுத்தோதநாம் இன்று தயாராயில்லை. ஆனால் இப்பெருஞ் சோதனைக்குரிய கஷ்ட காலத்தினூடே இந்தியமுஸ்லிம்கள் புரிந்த ஊழியத்தைச் சுருக்கமாய் எடுத்துக்கூறுவோம்:—கட்டுப்பாடின்மை,ஒற்றுமைக்குறைவு,வகுப்பு வேற்றுமை, பொருளின்மை, ஆதரவின்மை, பலமின்மை, அடிமை வாழ்கை, ஆளப்படுவது முதலிய எண்ணிறந்த கெடுதிகளிற் சிக்குண் டிருக்கும் நிலைமையில் இந்தியமுஸ்லிம்கள் புரிந்தசேவை புகழத்தக்க தல்லவென்பதை ஒப்புக்கொள்ளுவோம். ஆனால் இந்தியமுஸ்லிம் களின் தொண்டு, உற்சாகம் ஆகியவைகள் இஸ்லாமிய சகோதரத்து வத்தை வெளியிடத்தக்க முயற்சியின் அரிகுறிஎன்பதை மட்டுமா வது எவரும் மறுக்கமுடியாது. இந்தியமுஸ்லிம்களின் இச்சேவை யானது கூட்டிலடைப்பட்டிருக்கும் பறவை கூடுகட்ட முயற்சிப்பதற் கொப்பாக இருப்பினும் இவர்களின் சேவையை இகழ முடியுமா?

நண்பர்களே! பரிகசிப்பவர்களே!! சிறிப்பவர்களே!!! ஆக்ஷே பிப்பது,குறைகூறுவது, பரிகசிப்பது, நிந்திப்பது முதலியவைகள் இல குவான காரியங்களே. ஆனால் சமயஅழைப்பு, தேசமாறுதலைக் கோறுவோரின் வேண்டுகோள் ஆகியவைகளைச் செவியுற்று எழுந்து இதோவருகிறேனென் றுரைப்பது சாமானியமான காரியமல்லவென் பதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்.

இந்திய முஸ்லிம்களை வேலை செய்வதற்கழைத்தவைகள் எவை என்பதையும், சக்தி ஆதரவு சுயேச்சை முதலியவைகளில்லாத முஸ் லிம்கள் வீரத்தோடு தங்கள் ஹிருதயங்களின் ரத்தத்தை தியாகம் செய்த வரலாற்றையும் சிறிது கூறுவோம்:—

1919ஷுல் வேலை ஆரம்பமாயிற்று. இவ்வருடத்திலே கிலாபத் தியக்கத்தின் பரிசுத்தமான கிளர்ச்சிக்கு அஸ்திவாரக்கல் நாட்டப்பட் டது. மதச்சகோதரர்களே! கிலாபத்து என்னும் கப்பல் மும்மூர்த்தி விசுவாசிகளான கிருஸ்தவ புயல்காற்றில் சிக்குண்டு முழுகுந்தரு வாயிலிருந்ததோடு இக்கப்பல் சக்தியற்று உதவிசெய்வாரின்றி கூட லின் அலைகளுடைய தயவை எதிர்பார்த்து நின்ற சோதனைக்குரிய நெருக்கடியான காலத்தை ஒரு நாழிகையாவது உற்று நோக்கி உண் மையை உணருவீர்களா? இஸ்லாமிய கீர்த்தி உயர்வு ஆகியவைகள் பிரேதமாக்கப்பட்டு போயிருந்தன. 13 நூற்றுண்டுகளாக இருந்து வந்த இஸ்லாமிய புஷ்பச்சோலை இஸ்லாமிய விரோதிகளின் துர்செய் கையால் காய்ந்து பாழாயிற்று. இந்திய முஸ்லிம்கள் துக்கசாகரத்தில்

மூழ்கிக்கிடந்தனர். இவர்களின் ஹிருதயம் கொதித்துப் போயிருந்தது. இவர்களின் தேகத்துள் அதிக்கிரமச் செய்கைகள் தீ மூட்டின. அவநம்பிக்கை என்னும் உலகம் இவர்களைச் சூழ்ந்து கொண்டது. இத்தகைய பரிதாபகரமான க்ஷீனதெசையில் இருந்த முஸ்லிம்கள் தங்களை பாதுகாத்துக் கொள்வதற்குரிய சக்தியைக்கொண்டிருப்பார்களென்று எவரேனும் கருதமுடியுமா? நம்பிக்கையற்றுப் போயிருந்த 1919வது வருஷத்தின் சங்கடமான காலத்தில் கிலாபத்தியக்கத்திற்கு அடிகோலப்பட்டதுண்மையே. ஆரம்பத்தில் கட்டுப்பாடு ஒழுங்குமுறை ஆகியவைகள் பஞ்சமாகத்தானிருந்தன. ஆயினும் ஒரே வருடத்திற்குள் ஒவ்வொரு இடங்களிலும் கிளைஸ்தாபனங்கள் ஏற்பட்டு அவைகளைப் பராமரிக்கும் நடுநாயகமான பெரியஸ்தாபனமும் அமையப்பெற்றது. மேலும் முஸ்லிம்கள் கூட்டங் கூட்டமாய் இவ்வியக்கத்தி லீடுபட்டு விசுவாச மென்னும் திறந்த வெளியில் அணிவகுத்து அல்லாஹு த ஆலாவின் வழிபாட்டில் உதவிசெய்ய முன் வந்தனர். ஐவகை பகிஷ்காரம், சீர்திருத்தத்தைக் குலைப்பது, சுயநாடாகிய இந்தியாவைத் துறப்பது, தியாகம் வீரம் ஆகியவைகள் ஆரம்பமாயிற்று. இவைகள் அனுதாபமுள்ள ஹிருதயங்களைத் தன் சார்பாக இழுத்துக்கொண்டன. முஸ்லிம்களை அன்னியரைப் போல் பாவித்து வந்த ஹிந்து சகோதரர்களின் அனுதாபத்தையும் கிலாபத்தியக்கம் அடைந்தது. மகாத்மாகாந்தி ஜீ இக்கிளர்ச்சியின் லக்ஷியத்தையறிந்து இக்கிளர்ச்சியை நடத்திவைப்பதற்காக எழுந்து நின்றார். மஹாத்மா உண்மையான ஹிருதயத்தோடு மனப்பூர்வமாய் வேலைசெய்தாரென்பதை எவரும் மறுக்க முடியுமா? (அல்லாஹு தஆலா மஹாத்மாவுக்கு ஹிதாயத்துச்செய்வானாக) மஹாத்மா காந்தி அவர்கள் மனம்நொந்து வாடிக்கிடந்த முஸ்லிம் சகோதரர்களுக்கு தம்மால் இயன்றவரை அனுதாபங்காட்டினார். இஸ்லாமிய விரோதிகளை எதிர்த்து இந்தியா முழுவதிலும் ஓர்பெரும் ஜீவனுள்ள உணர்ச்சியை உண்டுபண்ணினார். மஹாத்மாவின் அரிய சேவைகளை சகலரும் அறிவார்கள். ஆனால் கிலாபத்தியக்கத்தின் மூலமாய் நிகழ்ந்தவைகளையும், அவ்வியக்கம் உண்டுபண்ணிய நல்லுணர்ச்சியையும்சற்று கூறுவோம்.

## I

இந்தியமுஸ்லிம்களுள் நல்ல ஜீவனையுண்டுபண்ணி சுயேச்சையின் தாகத்தைக்கிளப்பி இஸ்லாமிய விரோதிகளை எதிர்த்து அடக்கக்கூடிய முறையை உண்டுபண்ணிற்று. சிப்பாய்கலகத்திற்குப் பிறகு இந்தியமுஸ்லிம்கள் பெரும்க்ஷீனதெசையில் சிக்குண்டிருந்தனரென்பதை உலகம் நன்கறியும். இவ்விழிய நிலைமையில் சிக்குண்டிருந்த முஸ்லிம்களை மீட்பதற்காக முஸ்லிம்களுக்குக் கல்விகற்பிக்கப்பட்டு வந்ததோடு முஸ்லிம்களைச் சீர்திருத்துவதற்கான வேலையும் நடைபெறறது. 'ஸர்ஸயித் அஹ்மத்கான்' அவர்களின் கோஷ்டியினர் முஸ்லிம்களைச் சீர்திருத்துவதற்கான காரியங்களைச் செம்மையாய்ச்செய்தனர். ஆனால் இஸ்லாமிய ஒற்றுமை, இஸ்லாமிய சகோதரத்துவம் ஆகியவைகளை யொட்டியவார்த்தையை இந்தியமுஸ்லிம்கள் செவியுற வழியில்லாமலிருந்தது. ஆயினும் இதற்காக இயற்கைச் சட்டமானது வேறு வஸ்துக்களைச் சேகரமாக்கியதுபோலும்.





இருபதாவது நூற்றாண்டு துவக்கத்தில் டிரிப்போலியுத்தம் ஆரம்பமாயிற்று. இந்தயுத்தத்தின் மூலமாய் இந்தியமுஸ்லிம்கள் மேல்நாட்டாரின் பேராசையையொட்டிய அதிக்கிரமத்தை முதலாவதாகத் தெரிந்துகொண்டனர். பிறகு பால்கன்ஸ் யுத்தமானது செவி, நாவு ஆகியவைகள் மட்டுமின்றி ஹிருதயம் ஆத்மா ஆகியவைகளும் இஸ்லாமிய விரோதியின் அநியாயத்தைக் கண்டுகொள்ளச் செய்தது. ஆகவே அனுதாபம், பொருள், கூட்டுறவு, ஐக்கியம் ஆகியவைகளின் மூலமாய் அத்தேச முஸ்லிம்களுக்கு இந்திய முஸ்லிம்கள் உதவிபுரியவேண்டுமென்னும் ஆவல் பிறந்தது. முஸ்லிம் 'யூனிவர்ஸிட்டிக்காக 32, லட்சரூபாய்களை சேகரித்திருந்த முஸ்லிம்கள் டிரிப்போலியுத்தத்திற்காக சுமார் 5, 6 லக்ஷரூபாயை சேகரித்து 'ஹிலாலெ அஹ்மர்' என்னும் சங்கத்திற்கும், இதர சங்கங்களுக்கும் அனுப்பினர். இது சகோதரதத்துவம், அபிமானம், அனுதாபம் ஆகியவைகளின் மூலமாய் இந்திய முஸ்லிம்கள் புரிந்த முதற் காரியமாகும். பால்கன்ஸ் யுத்தத்தின்போது இந்திய முஸ்லிம்கள் 20, 25 லக்ஷரூபாயைச் சேகரித்து அனுப்பியதோடு யுத்தகளத்தில் காயமடைவோரின் சிகிச்சைக்காக வைத்திய கோஷ்டிகளையும் அனுப்பினர். இவ்வரிய செய்கையானது இஸ்லாமிய சகோதரதத்துவத்தின் வேரை பலப்படுத்திற்று.

மாஹா யுத்த காலத்தில் முஸ்லிம்களின் ஹிருதயங்களுக்குள்ளேயே ஒரு குறிப்பான ஆவேசம் வளர்ந்து வந்தது. இஸ்லாமிய விரோதிகளின் கடைசி அக்கிரமமானது முஸ்லிம்களை விழிக்கச் செய்துவிட்டது. ஆகவே 1919-க்குப்பிறகு இந்திய முஸ்லிம்கள் பகிரங்கமாய் கிளர்ச்சி செய்யவாரம்பித்து விட்டனர். இந்திய முஸ்லிம்கள் இரண்டு பிரதிநிதிகோஷ்டிகளை மேல் நாட்டிற்கனுப்பினார்கள்.

பத்திரிகைகள் ஆரம்பமாயிற்று. துண்டுப் பிரசுரங்கள் வினியோகமா
யிற்று. நூல்கள் வரையப்பட்டன. மகாநாடுகள் நடைபெற்றன.
கிலாபத்தியக்கத் தலைவர்கள் தேசத்தில் சுற்றுப் பிரயாணம் செய்த
னர். இவர்கள் சுற்றுப் பிரயாணஞ் செய்யாதபாகமே இந்தியாவில்
கிடையாது. பிரசங்கம் வியாசம் ஆகியவைகளின் மூலமாய் ஒவ்வொரு
முஸ்லிமுக்கும் ஒவ்வொரு இந்தியருக்கும் கிலாபத்தின் லக்ஷி
யத்தை அறிவுறுத்தி விட்டனர். கிலாபத்தியக்கத்தின் கோறிக்
கையை முஸ்லிம்கள் ஏற்றுக்கொண்டனர். கிலாபத்துத் தொண்டர்
களின் மூலமாய் இவ்வியக்கத்தை நாடெங்கும் பிரசாரம் செய்யப்
பட்டது. இஸ்லாமிய ஐக்கியம் இஸ்லாமிய சகோதரதத்துவம்
ஆகியவைகளை ஸ்திரப்படுத்துவதற்கு வேண்டிய ஆரம்பப்படிப்
பினையை முஸ்லிம்கள் பெற்றுக்கொண்டனர். ஆகவே, 'மராக்கோ'
விலிருந்து 'சைனு' கரைவரையிலுள்ள இஸ்லாமிய தேசத்தின் நிகழ்ச்
சியை இன்று ஒவ்வொரு முஸ்லிமும் கூடியவரை தெரிந்து கொள்
ளும் நிலைமையை அடைந்து விட்டதற்காக அல்லாஹுத ஆலா
வைத்துதிக்க வேண்டும். ஆச்சரியத்தை மூட்டத்தக்க இவ்வரிய
நிலைமையை இந்திய முஸ்லிம்கள் அடைந்ததற்குக்காரணம் கிலாபத்
தியக்கமல்லவா? இன்ஷா அல்லாஹுதஆலா இவ்வியக்கமானது
முஸ்லிம்களின் மற்ற கோரிக்கைகளையும் நிறைவேற்றிவைக்குமென்
பதில் எவரும் சந்தேகங்கொள்ள வேண்டியதில்லை.

## II

இந்தியமுஸ்லிம்கள் தங்களின் ஆக்ஷியை இழந்தபின் மறதி, தூக்
கம் ஆகிய வியாதிகளில் சிக்குண்டு போனார்கள். ஆகவே தேசம்,
அதன் பொருளாதாரம் முதலியவை சம்பந்தமாய் தங்களின் கடமை
இன்னவென்பதை இந்திய முஸ்லிம்கள் உணர்ந்திருக்கவில்லை. முஸ்லி
மல்லாததேச சகோதரர்கள் அன்னியர்கள், ஆகியவர்களோடு சம்பந்த
மிருந்துவரும் நிலைமையில் தங்களின் உரிமை இன்னின்னவென்பதும்
இந்திய முஸ்லிம்களுள் பெரும் பான்மையோர்க்குத் தெரியாமலிருந்
தது. ராஜீய வாழ்க்கையைப் பொருத்தவரையிலும் ஓர் பெரும் வியா
தியில் இவர்கள் சிக்குண்டிருந்தனர். இந்தியாவின் அதிகாரத்தோ
ரணையையும் ஏமாற்றக்கூடிய ஆக்ஷிமுறையையும் மேல்நாட்டுப்பணக்
காரர்களின் ஆதிக்கத்தையும் ஷைத்தானின் சூட்சிகளென்றே முஸ்
லிம்கள் கருதவேண்டும். ஆனால் முஸ்லிம்கள் இதன் உண்மையை
அறியாமலிருந்தார்கள்.



ஜனநாயகதத்துவம், குடியரசு ஆகியகொள்கை பரவிவரும் இந்நா
ளில் கைகொள்ளவேண்டிய முறையையும், பலதேசங்கள் ஒன்றுகச்சேர்
ந்து முன்னேற்றமடைந்து வருங்காலத்தில் எண்ணிறந்த சூட்சிகளை
எதிர்க்கவேண்டிய முறையையும் முஸ்லிம்கள் கற்றுக்கொள்ளவில்லை.
ஏனெனின்? முஸ்லிம்களுக்குள் முதன்முதலாக 'முஸ்லிம்லீக்' ராஜீய
அறிவை யூட்டியது. 'லீக்' மேல் நாட்டுக் கல்விப்பயிர்ச்சி யுள்ளவர்க
ளின்சங்கமாகவிருந்தது. ஆதலின் முஸ்லிம்கள் தங்களின் உரிமை, கட
மை முதலியவைகளைத் தெரிந்துகொள்ளக் கூடவில்லை. 'முஸ்லிம்லீக்'
'மஹமடன் எஜுகேஷனல்கான்பரன்ஸ்' ஆகியவைகள் இந்தியமுஸ்
லிம்களுக்கு இந்தியாவில் கிடைக்கவேண்டிய உரிமையைமட்டும் ஒரு
வாறு அறிவுறுத்தின. ஆனால் முஸ்லிம்லீக்கின் சிறகு மேல்நாட்டு
ஐஸ்வரிய தீயின் பிரகாசத்தால் கருகிக்கொண்டிருந்தது. "எஜுகேஷ
னல் கான்பரன்ஸ்" கல்வியையொட்டி மட்டும் வேலைசெய்து வந்தது.

இராஜீயதுறையில் எல்லாசமூகங்களும் சேர்ந்து வேலைசெய்வ
தற்கான ஒரு திறந்தவெளியை நீண்டகாலமாய் காங்கிரஸ் தயாரித்து
வந்தது. அதில் சம்பந்தப்படுவது பெரும் பாவமென முஸ்லிம்கள்
கருதிவந்தனர். இந்தியாவை தங்களின் நன்மைக்காகவே படைக்கப்
பட்டிருப்பதாய்க் கூறும் மேல்நாட்டுப் பணக்காரர்கள் தங்களின்
கூற்று வெளுத்துப்போகாதிருக்கும் பொருட்டு இந்தியமுஸ்லிம்களைத்
தங்களுக்குரிய ஆயுதமாகப் பாவித்து வந்தனர். ஆனால் மகாயுத்தத்
தின் அதிர்ஷ்டவசமாக உலகத்தின் மற்றசமூகங்கள் விழித்ததைப்
போல் இந்தியமுஸ்லிம்களும் விழித்துக்கொண்டனர். இவ்விழிப்புக்கு
டிரிப்போலி, பால்கன்ஸ் முதலிய தேசங்களில் அநியாயமாய் ஓடிய
இரத்தங்களே அஸ்திவாரக் கல்நாட்டின. இஸ்லாமிய ஐக்கியத்தின்
பொருட்டு 'ஜமாலுத்தீனெ அப்கானீ' 'முப்திஅப்துஹு' முதலிய
வர்கள் ஆரம்பித்தபிரசாரத்தை யொட்டிய கொடி இந்தியாவிலும்
பறக்க ஆரம்பித்தது. இக்கொடியானது கிலாபத்தியக்கத்தின் சொரு
பத்தில் தோன்றி இந்தியமுஸ்லிம்களின் ஐக்கியத்திற்கு வேண்டிய
வித்தை விதைத்துவிட்டது. 'ஹேக்நீதிமண்டபம்' 'சர்வதேய சங்
கம்' ஆகியவைகளுக்கெதிரிடையாய் கிலாபத்தியக்கமானது மராக்கோ
முதல் சைனுவரையுள்ள முஸ்லிம்களுக்குள் சம்பந்தத்தையுண்டு பண்
ணிவிட்டது. துருக்கியருக்கும், அரபியருக்கும் மத்தியில் கிலாபத்தி
யக்கம் நட்பையுண்டு பண்ணியதுபோலவே, ஆப்ரிக்காவுக்கும் ஆரேபி
யாவுக்கும், சகோதரத்துவ உணர்ச்சியை உண்டுபண்ணிற்று. மேலும்
இவ்வியக்கமானது இந்திய முஸ்லிம்களுக்கு ஒழுங்கானராஜீய அறி

வையும் நல்லவிழிப்பையும் உண்டுபண்ணி வருகிறது. இவையன்றி இராஜீயவாழ்கையை நடத்துவது அசாத்தியமாகும்,

"முஸ்லிம்களே! உங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்ளாமல் (அதை) நிறுத்திவிடுங்கள். மேலும் ஒருவருக் கொருவர் நேசமாயிருப்பதோடு அல்லாஹுத ஆலாவின்கயிற்றை இறுகப்பிடித்துக் கொள்ளுங்கள். இன்றேல் இஸ்லாமிய விரோதிகளை எதிர்க்கத் தக்க வன்மை உங்களைவிட்டு அகன்றுவிடும். அன்றியும் உங்கள் நிலைமை க்ஷீணித்துவிடும்" என்று இஸ்லாம் முஸ்லிம்களுக்குக் கூறியுள்ள இவ்வருங்கால வர்த்தமானத்தில் அடங்கியுள்ளவாறு நிகழ்ந்திருப்பனவற்றை பன்முறைபார்த்தாகிவிட்டது. ஐரோப்பா அமெரிக்கா ஆகியநாடுகளில் இருந்துவரும் பற்பல கிருஸ்தவ ஐக்கிய சங்கங்கள் நீதிமன்றங்கள், முதலிய அநேக ஸ்தாபனங்களின் நோக்கம், தங்கள் செல்வாக்கின் மூலமாய் இஸ்லாமுக்குரியவைகளை அபகரித்துக்கொள்ள வேண்டுமென்பதே. ஆதலின் கிருஸ்தவர்கள், மூன்று நூற்றாண்டுகளாய் இடைவிடாது செய்து வரும்முயற்சியின் பலனாய், இஸ்லாமின் செழுமையான புஷ்பச்சோலைகள் அநேகமாய் கொள்ளைக்கிரையாகிவிட்டன. எஞ்சியுள்ள இஸ்லாமிய பறவைகள், அறியாத்தனமாய் நஞ்சையுட்கொண்டு தங்களின்குறையை எதிரிகளிடமே முறையிட்டுக் கொள்ள முற்படுகின்றன. இப்பறவைகள் தங்களின் உயிருக்கு மன்றாடினதாய் தாங்களடைபட்டிருக்கும் கூடுகளின் சுவர்களிலேயே மோதுண்டு சிரசை உடைத்துக் கொள்ளுகின்றன.

ஹிந்துக்களையும், தேசத்தின் இதரசமூகங்களையும், தங்கள் விரோதிகளெனக்கருதி இஸ்லாமிய ஐக்கியபிரசாரத்தை அனாவசியமென்றும் அவசிய மற்றதென்றும், கூறுகிறவர்களே! இஸ்லாமிய ஐக்கியத்தின் பலம், கீர்த்தி, ஆகியவைகள் என்றைக்கு அற்றுப் போமோ அன்றே உங்கள் முயற்சிகள்யாகவும் வியர்த்தமாகிவிடும். மேலும், முஸ்லிம்களின் தேசியவாழ்கையும், சீர்குலைந்து போகுமென்பதை நன்றாய் தெரிந்து கொள்ளுங்கள்.

துருக்கியர், அரேபியர், தாத்தாரியர், ஈரானியர், ஆப்கனியர், துருக்கிஸ்தானியர், முதலிய முஸ்லிம்கள் நமக்குதவிபுரிந்ததில்லை, உதவிபுரியவும் முடியாது. இத்தேசங்கள் நம்உதவியைப்பெறக்கூடியனவாயும் அவைகளுக்கு நாம் உதவிசெய்யக் கூடியவர்களாயும் அல்லாஹுதஆலா ஏற்படுத்தியிருக்கின்றான். இத்தேசங்களில் வசிப்பவர்கள் பெயருக்கு மட்டும் அல்லது உண்மையாகவே கொண்டுள்ள சுயேச்சையும் கீர்த்தியும் நமக்குப்பெரும் உதவியாயும் இந்திய முஸ்லிம்களின் பெருமைக்குச் சாதனமாயும் இருக்கின்றன. இஸ்லாமியநாடுகளுக் குதவிபுரிய இந்திய முஸ்லிம்களுக்கு சிற்சில சந்தர்ப்பங்களே கிட்டியனவாயினும் அப்பொழுது இஸ்லாமிய ஐக்கியமென்னும் அறிவை இழந்திருந்த இந்திய முஸ்லிம்கள் மற்ற முஸ்லிம்களுக்குத் தக்க உதவிபுரியவில்லை. ஆனால் கிலாபத்தியக்கத்தைச் சார்ந்த முயற்சியுண்டுபண்ணியுள்ள சகோதரத்துவமும் இஸ்லாமிய ஐக்கியமும் இந்தியமுஸ்லிம்கள் சுயேச்சைபெற ஒருகாலத்தில் துர்கஸ்த்தான், ஈரான், துருக்கி, அரேபியா, முதலியவைகளின் உதவியை எதிர்பார்க்கத் தூண்டு கின்றனவல்லவா? ஒவ்வொரு இந்தியரும் கிலாபத்தியக்கத்தின் முக்கிய அம்ஸத்தை யுணர்ந்து, அதற்குதவிபுரிய முற்படாத வரையில் கிலாபத்தியக்கத்தின் மூலமாய் விளையக்கூடிய நற்பாக்கியத்தை எய்தமுடியாது,



கிலாபத்தியக்கத்தை, உண்மையில் நம் எதிரிகளை யடக்குவதற்கான ஆரம்பப் போர்க்களமென்றும் கடைசி போர்க்களமென்றும் கூறுவது மிகையாகாது. இவ்வியக்கத்தை விடாது ஒழுங்கான முறையில் நற்சேவை புரிவோமாயின் பணப்பேய் பிடித்தாடும் மேல்நாட்டு ஆக்ஷி நாசமாகி இஸ்லாம் உயர்பதவியை அடைவதோடு இந்தியா சுதந்தரமென்னும் பெரும்பேற்றை அடைந்து செழிப்பதையும் கண்டு களிக்கலாம். கிலாபத்தியக்கமானது தேசியகிளர்ச்சியில் ஒரு நவீன புத்துயிரை அளித்ததென்னும் உண்மையை, மகாத்மாகாந்தி முதல் ஒவ்வொரு நியாயபுத்தியுள்ள இந்தியதலைவரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். ஆகவே கிலாபத்தியக்கம் பூரண ஜீவனைப்பெற்று விடுமாயின், மோஸூல் சண்டையில் இந்தியா தன் உரிமையை வழுவின்றி பாதுகாத்துக் கொள்ளக்கூடும். மேலும் இஸ்லாமிய ஐக்கிய சம்பந்தமான பிரசாரம் இந்தியாவுக்குப் பெரும் நற்பாக்கியமென்பதும் அப்பொழுது நிச்சயமாகி விடும்.

---

# அமீர் அமானுல்லாகானும், ஜும் ஆவின் குத்பாவும்.

கந்தாரிலுள்ள "கிர்கா ஷரீபாநபவி" என்னும் ஜாமிஆ மஸ்ஜிதில் காஜீ அமீர் அமானுல்லாகான் அவர்கள் ஓதிய குத்பாக்கள்.

## முதலாவதுகுத்பா.

புகழ் அடங்கலும், உலகத்தைப் படைத்து ரக்ஷிக்கின்ற அல்லாஹுத ஆலாவுக்கே உரித்தாகும். வணக்கத்துக்குடையவன் அல்லா

ஹுத ஆலாவைத்தவிற வேறுயாருமில்லை யென்றும், அவன் இணை யற்றவனென்றும், தனித்தவனென்றும், சாக்ஷி சொல்வதோடு சையிதினு மௌலானு முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹிவ அலா ஆலிஹீவ அஸ்ஹாபிஹீ அஜ்மயீன்) அவர்கள் அல்லாஹுத ஆலாவின் திருத்தூதரென்றும், அடியாரென்றும், சாக்ஷிசொல்லுகின்றேன்'' (இந்தஹம்து, ஸலவாத்தை அரபியில் ஓதிவிட்டு பார்ஸீ பாஷையில் ஓதியதாவது;—)

நண்பர்களே! அல்லாஹுத ஆலாவின் கட்டளைகளையும், நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் உத்திரவுகளையும், ஜனங்களுக்கறிவிப்பதே ஜும் ஆவின்குத்பாவைச் சார்ந்தலக்ஷிய மென்பதை நீங்களறிவீர்கள். ஆகவே, குத்பாவைக் கேட்பவர்கள் அதையறிந்து உணர்ச்சிபெறக்கூடியபாஷையில் குத்பா இருந்துவர வேண்டும்.

நாயகம்ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் (ஒருவித அங்கியாகிய) 'கிர்கா' வின்மூலமாய் 'கந்தார்' என்னும் இத்தேயத்திற்கு பெருஞ்சிறப்பும், கீர்த்தியுமேற்பட்டிருக்கிறது. ஹரமைனுஷ்ஷரீபைனுக்குப் பிறகுமற்ற ஜாமீஆமஸ்ஜிதுகளைக் காட்டினும், இந்த ஜாமிஆமஸ்ஜித் கீர்த்திவாய்ந்த தென்று நானும் நீங்களும் கருதுவதுண்மையே. இவ்வாறு கருதுவதற்குக் காரணம் இன்னவென்பதை நாம் அறிவோம். நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பரிசுத்தமான 'கிர்கா' இம் மஸ்ஜிதில் இருந்துவருவதே இதற்குக் கீர்த்தியை யளித்திருக்கிறதல்லவா? இந்த 'கிர்கா' வானது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பரிசுத்தமான வியர்வையால் நனைந்திருக்கிறது. மேலும், நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் கூட்டுறவைப் பெற்று இந்த 'கிர்கா' உயர்வையடைந்திருக்கின்றது. ஆகவே, நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் இவ்வுடையை கௌரவித்து, இதற்கு நாம் மரியாதை செய்வதுபோலவே நல்லனவற்றைஏவி தீயனவற்றை யகற்றும்பொருட்டு நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்கள் உம்மத்தோர்க்கு விடுத்துள்ள உத்திரவுக்குட்பட்டு அதை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர முயலவேண்டும். மேலும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் ஏவல், கட்டளை ஆகியவைகளுக்குச் சிறிதும் நாம் மாறு செய்யாமலிருக்கவும் வேண்டும்.



## தொழுகையைப்பற்றி எச்சரிக்கை.

ஐந்துநேரத்துத் தொழுகையை அதிக ஒழுங்காயும் மிக்கக் கட்டுப்பாடாயும், நீங்கள் நிறைவேற்ற வேண்டுமோய் நான் உங்களுக்கு அளவுகடந்து எச்சரிக்கின்றேன். சகலவணக்கங்களைக் காட்டினும், தொழுகை அதிக சிரேஷ்டமான வணக்கமென்பதை நீங்கள் நன்குணரவேண்டும். இத்தொழுகையின் மூலமாய் இம்மை மறுமையைச்சார்ந்த எண்ணிறந்த நன்மைகள் ஏற்படக்கூடியதாக இருக்கின்றது. ஆகவே, மஸ்ஜிதுகளில் ஜமா அத்தோடு உங்கள் தொழுகையை நிறைவேற்றுங்கள். இதை எவ்வகையினும் தவறவிடாதீர்கள். இத்தொழுகையைப் போலவே, ரமளான் மாதத்து நோன்பு, ஜகாத், ஹஜ்ஜுபோன்ற மற்ற கடமைகளையும், நிறைவேற்றுவதில் அலக்ஷியமாக இராதீர்கள். மேற்கூறிய ஒவ்வொரு வணக்கங்களையொட்டியும் தனித்தனியே கூலிகொடுக்கும் நாளில் அல்லாஹுத ஆலா விசாரித்து அவைகளை நிறைவேற்றுததற்கு தக்கதண்டனையை விதிப்பான் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்.

## ஐக்கியத்தைப்பற்றி சில வார்த்தை.

இஸ்லாமினுடையவும் அப்கானியினுடையவும், ஐக்கியத்திற்காக விசேஷமாய் நீங்கள் தொண்டுபுரியவேண்டு மென்று நான் உங்களை வற்புறுத்துகிறேன். உங்கள் சகோதரத்துவம், உங்கள் கட்டுப்பாடு உங்கள் ஒற்றுமை, ஆகியவைகளிலேயே உங்கள் இம்மை மறுமையைச் சார்ந்த நன்மையும், சித்தியும், ஜெயமும், அடங்கிக்கிடக்கின்றன வென்பதை நீங்கள் ஞாபகத்திலிறுத்திக் கொள்ளுங்கள். மதம், தேசம், ஆகியவைகளின் முன்னேற்றத்திற்காக ஊக்கத்தோடும் அபிமானத்தோடும் தொண்டுபுரிவீர்களாயின் நீங்கள் அல்லாஹுத ஆலாவினுடையவும், நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களினுடையவும் நட்பிற்குரியவராவீர்கள். மேலும், உங்கள் அரசரும் உங்கள்அதிகாரிகளும், உங்கள்மீது சந்தோஷமுறுவார்கள். அன்றியும் உங்களின் எந்த விரோதியும் தங்களின் சுயநலத்தைக்கருதி உங்களை ஏமாற்றிவிட்டதாய் பெருமை பாராட்டிக்கொள்ள முடியாது. நயவஞ்சகத்திற்கும் வேற்றுமைக்கும் இடம் கொடுத்துவிட்ட தேசம் சமூகம், ஆகியவைகளே இன்று மானமிழந்து இழிவான பெரும் படுகுழியில் விழுந்து கிடக்கின்றன. இன்று இஸ்லாம் அடைந்திருக்கும் க்ஷீணதெசைக்குக் காரணம் நயவஞ்சகமே. நயவஞ்சகமானது எண்ணிறந்த இல்லங்களை நாசமாக்கி இருக்கின்

றது. ஆகவே அல்லாஹுத ஆலாவுக்காக நயவஞ்சகத்தை யொட்டியவைகளில் சம்பந்தப் படாமலும் இஸ்லாமிய ஐக்கியத்தைக் கெடுக்காமலு மிருப்பீர்களாக.

## ஜிஹாத்தின் சிறப்பு.

என்னுடையவும், உங்களுடையவும், இஸ்லாமின் கடமைகளுள் முக்கியமான கடமை ஜிஹாத்தை நிலைநிறுத்துவதும், உயிர் பொருள் ஆகியவைகளின் மூலமாய் அல்லாஹுத ஆலாவின் வழிபாட்டில் ஈடுபடுவதுமாகும். 'கந்தார்' தேயத்தின் சுயமதிப்புள்ள வகுப்பார், ஹிஜாதில்மிக்க ஊக்கமுள்ளவர்களென்பதையொட்டி நான்அல்லாஹுத ஆலாவைத் துதிக்கின்றேன். இத்தேசத்தின் ஆண், பெண், குழந்தை, கிழவர் முதலிய யாவரும் ஜிஹாத்தை யொட்டிய காரியத்தில் அதிக பிரீதியும் உற்சாகமும் உள்ளவர்களென்பதை உலகம் நன்கறியும். உங்கள் ஊக்கம், உற்சாகம், மதவிசுவாசம், ஆகியவைகள் நீங்கள் யுத்தம் செய்யாமலேயே உங்களுக்கு மிகப்ரீதியான சுயேச்சையை யளித்தனவல்லவா?

'ஷுஹதாக்கள்' தங்களின் ஜீவிய காலத்திலேயே மறுமையிலடையும் கீர்த்தி, பாக்கியம் ஆகியவைகளைக் கண்டுகளித்து பிறகு உயிர்துறப்பது ஜிஹாத்தின் நன்பலன்களில் ஒன்றல்லவா? மரணகாலம் வராதவரை எவரும் நம்மைக்கொல்வதற்கு ஆயிரக்கணக்காய் முயன்றாலும் சித்திபெறமாட்டாரென்னும் பொதுவான கொள்கையை முஸ்லிம்களாகிய நாம் தெளிவாய் அறிந்திருக்கின்றோம். குறிக்கப்பட்ட நேரத்திற்கு ஒருநொடி முன்னே அல்லது பின்னே மரணம் வருவதில்லை என்னும் ஒரு திருமறையுமிருந்து வருகிறது.

நாம் எதிரிகளை ஜயித்து இஸ்லாமிய லக்ஷியத்தை அடைந்துவிட்டோமாயின் நமக்கு 'காஜி' என்னும் பட்டம் கிடைக்கின்றது. ஒருசமயம் அல்லாஹுத ஆலாவின் வழிபாட்டில் உயிரை தியாகம் செய்துவிடுவோமாயின் நன்மை தீமையைச்சார்ந்த விசாரணையை விட்டு மீண்டு ஷுஹதாக்கள் சாலிஹீன்களென்னும் கூட்டத்தில் சேர்ந்துவிடுகின்றோம். இவை முஸ்லிம்களாகிய நமக்கு எத்தகைய அதிர்ஷ்டமாயும் சந்தோஷத்திற்குரியதாயு மிருக்கின்றன.

## இரண்டாவது குத்பா.

**(இந்தகுத்பாவில் ஹம்துஸலவாத்துக்குப்பின் அமீர்காஜி அவர்கள் தங்களின் பார்ஸிபாஷையில் துஆ ஓதினார்கள்)**

யாஅல்லாஹ்! உன்பிரீதிக்குரித்தான நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பொருட்டால் அந்தநாயகத்தின் உம்



மத்தாகிய நாங்கள் ஷரீஅத்தில் ஸ்திரமாயிருக்கும்படி தௌபீக் செய்தருள். இஸ்லாமிய கீர்த்தி, சிறப்பு, ஆகியவைகளின் எல்லா விரோதிகளுடையவும் சூக்ஷி, ஏமாற்றம், ஆகியவைகளை உபயோகமற்றனவாகச் செய்தருள். யாஅல்லாஹ்! எதுவும் அடைந்திராத உயர்பதவியை ஆப்கன் மதம், தேசம், ஆகியவைகளுக்குத் தந்தருள். யாஅல்லாஹ்! ஆப்கனின் சைன்னியத்திற்கு அதன் எதிரிகளின்மேல் ஜயத்தைக்கொடு. தங்கள் தேசத்தின் நன்மைக்காக உழைக்கும் ஆப்கன் ஜனங்கள், அதிகாரிகள், உலமாக்கள், ஸாதாத்துகள் ஆகியவர்கள் உன்கிருபைக் கருகனாவர்களாயும் மதப்பெருமைக்குரியவர்களாயும் செய்தருள். யாஅல்லாஹ்! நான் ஆப்கனின் ஒருசிறிய ஊழியனாகும். மேலும், என்மதம் தேசம் ஆகியவைகளின் முன்னேற்றத்தைத்தவிற வேறுலக்ஷியத்தை யான் என்மனத்துள் கொண்டிருக்கவில்லை. ஆதலின் என் நற்கோரிக்கை சித்திபெறச்செய். யாஅல்லாஹ்! உன் தயாளம் கிருபை ஆகியவைகளின் பொருட்டால் இஸ்லாம் உலகத்தை இப்பெருங்கஷ்ட நிஷ்டூரத்திலிருந்து விடுவித்து முஸ்லிம்கள் ஆரம்பகால முஸ்லிம்களைப்போல் இஸ்லாமியதொண்டு புரியும்படி கிருபை செய்தருள். எதிரிகள், சூட்சிக்காரர்கள் மோசத்தைத்தொழிலாய்க் கொண்டவர்கள் ஆகியவர்களின் கெடுதியை விட்டும் எல்லா இஸ்லாமிய ஆக்ஷியையும் காத்தருள். ஆமீன்...............

(காஜி அமீர் அமானுல்லாகான் அவர்களின் மேலேவரைந்துள்ள குத்பாக்களை (பிரசங்கங்களை) "இத்திஹாதே மஷ்ரிகீ" யிலிருந்து 'மதீனா' என்னும் பத்திரிகை எடுத்தெழுதி மீண்டும் வரையிந்திருப்பதாவது:—) 'அமீர் காஜீ அமானுல்லாகான் கல்லதல்லாஹு முல்கஹு அவர்கள் ஓதிய குத்பாக்களை இன்றைய வெளியீட்டில் மொழி பெயர்த்திருக்கின்றோம். காஜீ அவர்கள் தங்கள் 'குத்பா' வின் ஆரம்பத்திலேயே 'குத்பா'வின் லக்ஷியம் 'குத்பா' வை கேட்பவர்களுக்கு விஷயங்களை விளக்குவதாகும். ஆதலின் 'குத்பா' வை கேட்பவர்கள் அறியக்கூடிய பாஷையிலேயே 'குத்பா'க்களிருக்க வேண்டுமென்பதை விளக்கிவிட்டு, பிறகு 'குத்பாவை' தங்களின் சுயபாஷையாகிய பார்ஸியில் ஓதியிருக்கின்றார்கள். ஆத்மாக்களுக்கு புத்துயிரளிக்கத்தக்க உபதேசங்கள் நிறைந்த 'குத்பாக்களின் மூலமாய் உண்டாகும் உணர்ச்சியை அந்தகுத்பாக்களை செவியுற்றவர்களின் ஹிருதயமே நன்கறியும். அந்த குத்பாவை வாசித்து நம்ஹிருதயங்கள்இன்பமுறும் ஸ்திதியில் அதைச்செவியுறுகிறவர்களின் நிலைமை எவ்வாறிருக்கக் கூடும்? குத்பாவின் பாஷை சம்பந்தமாய் இந்தியாவி

விருந்துவரும் அபிப்பிராய பேதத்தை நண்பர்களறியாமலில்லை.
ஆனல் கலப்பற்ற 'ஹனபி' மதஹபைச்சார்ந்த ஆப்கன்தேயத்தில்
ஹனபீ மதஹபின்படி ஆஷிபுரியும் ஆப்கன்தேசத்தில் 'குத்பா' வின்
பாஷையை யொட்டி இருந்துவரும் ஒற்றுமையைக் கண்ணுறும்போது
பெரும் ஆச்சரியமாக விருக்கின்றது. சிறப்புற்ற உலமாக்கள் காட்டும்
நேரானவழியின் பிரகாசத்தைப் பின்பற்றி தன்தேசம் முன்னேற்ற
மடைய உழைத்துவரும் ஆப்கன்தேசத்து கீர்த்திவாய்ந்த அமீர்
அவர்கள் தங்களின் சுயபாஷையில் குத்பாவை ஓதிவருகிருர்கள்.
ஆப்கன் ஆஷியை ஏற்றுக்கொண்ட காலந்தொட்டு குலபாயெராஷி
தீன்களைப் பின்பற்றி ஜும் ஆவின இமாமாகவும் கதீபாகவும் இருந்
திவருகின்ற அமீரவர்கள் குத்பாவின் பாஷை சம்பந்தமாய் தங்கள்
தேச உல்மாக்களின் அனுமதியைப் பெற்றிருப்பார்களல்லவா?

---

# இஸ்லாமும் ஹபஷாவும்.

(இரண்டாவது வால்யூம் 54-வது பக்கத்தொடர்.)

முஸ்லிம்கள் சிலகாலம் வரையில் மிக்க சுயேச்சையோடும்
சௌகரியத்தோடும் ஹபஷாவில் வாழ்ந்து வந்தனர். நாயகம் ஸல்லல்
லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மதீனமா நகரையடைந்து அங்கு
இஸ்லாமிய கரங்களில் சக்ரவர்த்திய சக்தி தோன்றி விட்டதால்
'ஹபஷா' தேசத்தில் வசித்தவர்களுள் கடைசி கூட்டம் ஹிஜ்ரீ ஏழா
வது ஆண்டில் 'கைபர்' ஜெயிக்கப்பட்ட சந்தர்ப்பத்தில் மதீனமாநக
ருக்கு வந்து சேர்ந்தது.

நஜ்ஜாஷீ அரசர் தம் ஜீவியகாலம் வரை நாயகம் ஸலல்லாஹு
அலைஹிவஸல்லம் அவர்களிடத்தில் மிக்க விசுவாசத்தோடு சம்பந்
தம் வைத்திருந்தார். மேலும் அவ்வரசர் சதா முஸ்லிம்களுக்குதவி
புரிந்து கொண்டுமிருந்தார். 'உம்முல்மூமினீன் உம்முஹபீபா' ரலி
யல்லாஹு அன்ஹா அவர்கள் ஹபஷ் தேசத்தில் விதவையாகி நாய
கம் ஸல்ல்லலாஹு அலைஹிவஸல்லம் அவர்களை விவாகமும் செய்து
கொண்டார்கள். இவர்களின் 'மஹர்' தொகை முன்னூறு தீனரை
நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் சார்பாக 'நஜ்
ஜாஷீ' அரசர் கொடுத்தார்.

### நன்றிக்குக்கைமாறு.

நஜ்ஜாஷீ அரசர் முஸ்லிம்களுக்குப் புரிந்த உபகாரத்திற்கு பிரதி
உபகாரமாக முஸ்லிம்கள் நஜ்ஜாஷீ அரசரிடத்தில் விசேஷவிசுவாசத்



தோடு இருந்து வந்தனர். முஸ்லிம்கள் ஹபஷா தேசத்தில் தங்கியயிரு
ந்தகாலை ஒருகலக்காரன்புரிந்த போரில் நஜ்ஜாஷீ அரசருக்கு முஸ்லிம்
களின் சகாயம் வேண்டுமோ? என வினவும் முறையில் நாயகம் ஸல்லல்
லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் சிறிய தந்தையின் புத்திரரும்
''அஷரயெமுபஷ்ஷரா'' என்னும் உத்தமர்களில் ஒருவருமான ஹஜ்ரத்
ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் குதிரையிலேறி நதியைக்
கடந்து யுத்த களத்தை யடைந்தார்கள்.

'நஜ்ஜாஷீ' அரசருக்குப் பிறகு ஹபஷாவின் அரசராக இருந்த
வர் முஸ்லிம்களுக்குஏற்றவராக இருக்கவில்லை. இவர் காலத்திலேயே
முஸ்லிம்கள் ஹபஷாவை விட்டு வெளி ஏறினர். ஹிஜ்ரீ ஒன்பதாவது
ஆண்டில் ஜித்தாவுக்கெதிரே ஹபஷாவின் சைன்னியம் தோன்றிற்று.
ஆயினும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எதிர்த்
துப் போர்புரிய சைன்னிய மனுப்பாமல் விஷயத்தை யறிந்து வரும்
பொருட்டு 300 முஸ்லிம்கள் கொண்ட ஒரு கூட்டத்தை அனுப்பினூர்
கள். இக்கூட்டம் ஹபஷாதேசத் தோடு சமதானஞ்செய்து கொண்
டுத் திரும்பி வந்தது.

பலமும் ஆயுதப்பெருக்கமுமுள்ள ஓர் அரசாங்கம் மற்றொரு
தேசத்தின் மீது படையெடுப்பதற்கு அவ்வரசாங்கத்தைச் சார்ந்த
நபருக்குத் துன்பமிழைப்பது, தன் தேசத்தை நோக்கி சைன்னியம்
முற்படுவது ஆகியவைகள் போதியகுற்றங்களாக விருக்கின்றன.
ஆனல் யூஸுப் அலைஹிஸஸல்லாம் அவர்கள் தங்களின் எதிரிகளான
சகோதரர்களை நோக்கி "இன்று எவருக்கும் என்மூலமாய் இழிவு
ஏற்படமாட்டாது" என்று அறிவித்ததைப் போலவே நானும்
அறிவிக்கின்றேன், எனப் பகர்ந்து மக்கமாநகர் ஜெயிக்கப்பட்டவன்று
தங்களின் வந்நெஞ்கர்களான கொடும் விரோதிகளை மன்னித்த இரக்
கமுள்ள நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நஜ்ஜாஷீ
அரசர் புரிந்த நன்றியை நினைத்து தங்களைச் சார்ந்தவர்களுக்கு
"ஹபஷாவாசிகள் உங்களோடு சமாதானமாக விருக்கக்கருதும்வரை
நீங்களும் அவர்களோடு சமாதானமாக இருக்கவேண்டும்" என்று
அறிவித்தார்கள்.

முஸ்லிம்கள் ஓர் உலகத்தைத் தலைகீழாய்ப் புரட்டினர். ஆப்
ரிக்கா கண்டத்தை எஹிப்து முதல் மராக்கோவரையில் நடுங்கச்
செய்தார்கள். ஆப்ரிக்காவின் ஒவ்வொருபாகத்திலும் ஒவ்வொருபுதிய
அரசாங்கத்தை ஸ்தாபித்தார்கள். ஆனல் பலமும் செல்வாக்கும் இல்
லாத ஓர் தேசம் கிருஸ்தவமதத்தைத் தழுவியிருந்த ஓர் தேசம்,

கல்வி நாகரீகமில்லாத ஓர் தேசம், இஸ்லாம் தோன்றுவதற்கு முன் பன்முறையும் இஸ்லாம் தோன்றியதற்குப்பின் ஒரு முறையும் தங்கள்தேசத்தைப் படையெடுத்த ஓர் தேசம் அத்தேசம் தங்கள் தேசத்துக்குச் சமீபமாக விருந்தும் அது முஸ்லிம் ஜெயபேரிகை என்னும் வெள்ளத்தை விட்டுத் தப்பித்திருந்ததேன்? ஹபஷா தேசத்தைக் கைப்பற்ற முடியாமல் முஸ்லிம்களை ஒரு சுவர் குறுக்கே நின்று தடுத்து வந்தது. அச்சுவர் முஸ்லிம்களின் பரிசுத்தமான அல்லாஹுத ஆலாவின் கட்டளையாகிய "நன்றிக்குப் பிரதி நன்றியைத் தவிர வேறெதுவு முண்டா?" என்பதே யாகும்.

ஹபஷாவின் அரசர் ஓர்சிறுதொகையினர்களான முஸ்லிம்களுக்கு ஏழெட்டுவருடம் அடைக்கலமளித்த நன்றிக்குப் பிரதியாக முஸ்லிம்கள் 800 வருடம் வரை அத்தேசத்தின் ஒருவிரலுக்குக்கூட பின்னமேற்படாதவாறு நடந்துகொண்டனர். உலகம் நடுங்கத்தக்க சக்தியைக் கொண்டிருந்த முஸ்லிம்கள் ஹபஷாதேசத்தின் மீது காட்டிய ஆச்சரியமான தயவை சரித்திரம் எக்காலத்திலும் மறக்கவியலாது.

முஸ்லிம்கள் செய்நன்றியை மறப்பவர்களல்ல வென்பதை இவ்வொரே செய்கையின் மூலமாய் உலகம் நன்கறியவேண்டும். முஸ்லிம்கள் ஏழெட்டு வருடத்தின் நன்றிக்கு எண்ணூறுவருஷம்வரை பிரதி நன்றி புரிந்திருக்கின்றனர்.

அதிகாரவர்க்கத்தினர் முஸ்லிம் வகுப்பின் குணவிசேஷத்தை (நேஷனல் காரைக்டரை) அனுபவப்பூர்வமாய்த் தெரிந்துகொண்டிருக்கின்றனர். ஆயினும் இன்னொரு முறை முஸ்லிம்களின் இக்குணவிசேஷத்தைப் பரிக்ஷிப்பதற்கு யாரேனுமுண்டா? (தொடரும்)

---

# இஸ்லாமும் சுயேச்சையும்.

(2-வது வால்யூம் 414-வது பக்கத்தொடர்)

(இமாமுல் ஹிந்து மௌலானா அபுல்கலாம் ஆஜாத் அவர்களெழுதியது)

இதுவரை முதலாவது விஷயத்தைப்பற்றி வரைந்துள்ளோம். இனி இரண்டாவது பாகத்தைப்பற்றி கவனம் செலுத்துவோம்.

## இஸ்லாமிய ராஜீய முறையில் பொருள், உரிமை, அந்தஸ்து ஆகியவைகளில் சமத்துவம்.

இஸ்லாமில் கலீபாக்களுக்கு மதச்சம்பந்தமான மரியாதை, உயர்வு ஆகியவைகளைத் தவிர நிருவாகம், பொக்கிஷம் முதலியவைகளில் எத்தகைய விசேஷ உரிமையும் கிடையாது. இது இஸ்லாமிய



சரித்திரம் பிரஸ்தாபிக்கக் கூடியதாயும், உலக ஜனங்களால் ஒப்புக் கொள்ளப்பட்டதாயு மிருக்கின்றது. இதை மெய்ப்பிப்பதற்கு இஸ்லாமிய ஆட்சியைச் சார்ந்த நிகழ்ச்சிகள் போதுமானவையாக இருப்பினும் சிற்சில குறிப்புகளை அடியில் வரைகின்றோம்.

நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பொது மக்களான முஸ்லிம்களோடு எவ்வாறு நடந்துகொண்டார்கள்; எத்தகைய சமத்துவவுணர்ச்சியோடு சகல முஸ்லிம்களிடத்திலும் கூடிக் கலந்திருந்தார்களென்பன முன் வரையப்பட்டுள்ள ஏடுகளில் பகிரங்கமாகிவிட்டன. நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் சரிதையிலுள்ள எண்ணிறந்த சம்பவங்களில் ஒன்றாவது இச்சமத்துவக்கொள்கையை அங்கீகரிக்கக் கூடாததாகவில்லை. எச்சபையிலும் அச்சபையின் ஒரு சாதாரண அங்கத்தினரைப் போலவே நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சதா வீற்றிருப்பார்கள். "யா அல்லாஹ்! நான் எளியவன். என்னை எளியவர்களோடு ஜீவித்திருக்கச் செய். மேலும் எளியவர்களின் கூட்டத்திலிருக்கும் போதே எனக்கு மரணத்தைக்கொடு" என்று நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எச்சந்தர்ப்பத்திலும் கூறுவார்கள். ஒரு சாதாரண அடிமையைப்போல் உட்கார்ந்து கொண்டே சாப்பிடுவார்கள். அன்றியும் "நான் அல்லாஹுத ஆலாவின் அடிமையாதலின் ஒரு அடிமை சாப்பிடுவது போலவே சாப்பிடுகிறேன்" என்று தங்களை மிக்கத்தாழ்வு படுத்திக் கூறுவார்கள். (அல்லாஹு அக்பர்!)..............................................................

## இஸ்லாமிய கலீபாவின் அதிகாரம்.

ஹஜ்ரத் அபூபக்கர்ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கிலாபத்தின் பொறுப்பை ஏற்றுக்கொண்டு முதன் முதலாகச்செய்த பிரசங்கத்தைச் சார்ந்த சிலவாக்கியங்கள் வருமாறு:—

"ஜனங்களே! நான் உங்களைக் காட்டிலும் நல்லவனாக இல்லாதிருக்கும் நிலைமையில் உங்கள் கலீபாவாக அமர்ந்திருக்கின்றேன். ஜனங்களே! நான் (குர் ஆன் ஷரீபையும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் உத்திரவையும்) பின்பற்றி எதையும் நடத்திவைக்க வேண்டியவனே யன்றி நவீனமாய் எதையும் செய்யக் கூடியவனல்ல. நான் ஒழுங்கான முறையில் வேலை செய்வேனாயின் எனக்குதவி புரியுங்கள். நான் தவறி விடுவேனாயின் என்னைச் சீர் திருத்துங்கள்?" என்பதே.

ஷாம் தேசம் ஜெயிக்கப்பட்டபின் நடைபெற்ற ஒரு ஆலோசனைக் கூட்டத்தில் ஒரு காரியத்தையொட்டி அபிப்பிராய பேதமேற்பட்டபோது ஹ்ஜரத் உமர் பாரூக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒரு நீண்ட பிரசங்கம் செய்தார்கள். அப்பிரசங்கத்தின் சில பதங்களாவன:—"நான் உங்களுள் ஒருவருக்கு சமானமாகவிருக்கின்றேன். ஆகவே என் அபிப்பிராயத்தை நீங்களெல்லீரும் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று நான் கருதவில்லை" என்பதே:

"நான் உங்களுள் ஒருவருக்குச் சமானமாக விருக்கின்றேன்" என்னும் வார்த்தையை உற்று நோக்குங்கள். இந்நாளில் நடைபெறும் கூட்டங்களில் பிரஸிடெண்டின் அபிப்பிராயம் இரண்டு ஓட்டுகளுக்குச் சமதையாக அல்லது பிரஸிடெண்டுக்கு "விய்டோ" என்னும் அதிகாரம் இருப்பதாக அறிவிக்கப்படுகின்றது. ஆனால் ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், நான் கலீபாவாக இருந்தாலும் என் அபிப்பிராயம் மற்றவர்களைப் போலவே ஒரு ஓட்டின் அந்தஸ்தையே கொண்டிருக்கிறது. ஒரு ஓட்டைக்காட்டிலும் அதிக உரிமை (எனக்கு) கிடையாது என்று தெளிவாய் விளக்கியுள்ளார்கள்.

இதற்கு முன் ஹஜ்ரத் அபூபக்கர்ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் "குர் ஆன் ஷரீபையும், நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் உத்திரவையும், பின்பற்றி (எல்லாக் காரியங்களையும்) நடத்திவைக்க வேண்டியவனே யன்றி நவீனமாய் எதையும் செய்பக்கூடியவனல்ல" என்று பகர்ந்து 'குர் ஆன் ஷரீபு' ஹதீதுஷரீபு ஆகியவைகளிலுள்ள உத்தரவுகளை பகிரங்கஞ் செய்து அவை ஒழுங்காய் நடையெற்றுவருவதற்கு வேண்டிய ஒரு காவல்காரர் என்பதைத்தவிர்த்து வேறு அந்தஸ்தாவது தமதிஷ்டம்போல் அபிப்பிராயங் கூறும் உரிமையாவது இஸ்லாமிய கலீபாக்களுக்கு இல்லை என்பதை தெளிவு படுத்தியிருக்கின்றார்கள்,

இஸ்லாமிய கலீபாக்களின் இத்தகைய நடவடிக்கைகளுக்குச் சமதையான எக்காரியத்தையேனும் இன்றைய மேல் நாட்டு ஜனநாயக ஆக்ஷியிலிருந்து எடுத்துக்காட்ட முடியுமா? அறிஞர்களே! சிந்தியுங்கள்!! உற்று நோக்குங்கள்!!!

### கலீபாக்களின் செலவு.

தேசத்திற்கும், தேசமக்களுக்கும், பொதுவான பணம் குறிப்பிட்ட ஒருநபரின் ஆடம்பர பெருமைக்காகவும், உல்லாசவாழ்க்கைக்காகவும், விரையஞ்செய்யப்படுவது எதேச்சாதிகார அரசாங்கத்தின் தீச்செயல்களில் பெரும் அநியாயமானதும், அருவறுக்கத்தக்கதுமா



கும். அல்லாஹுத ஆலாவின் ஆயிரக்கணக்கான அடிமைகள் உயிர் வாழ்ந்திருப்பதற்கவசியமான அற்பஉணவு அற்றிருக்கின்ற காலத்திலும் அரசன் தங்க சிம்மாசனத்திலிருந்துகொண்டு நவரத்தினங்களால் விளையாடுவது விந்தையல்லவா?

கீர்த்தியைப்பெறுவது, பொருளைச்செலவிடுவது ஆகியவைகளில் சாதாரண பிரஜையும் தேசத்தலைவனும், சமஅந்தஸ்தையுடையவரென்னும் கொள்கை உண்மையான ஜனநாயக ஆக்ஷியின் ஒருமுக்கிய நிபந்தனையாக இருக்கவேண்டும். தேசத்தலைவனுக்கு விசேஷ அந்தஸ்தாவது, பொக்கிஷத்தின் பொருளையடைவதற்குப் பிரத்தியேக உரிமையாவது ஜனநாயக ஆக்ஷியில் இருந்துவரமுடியாது.

மேற்கூறியவைகள் ஜனநாயக ஆக்ஷிக்கு இன்றியமையாத லக்ஷணங்களென்று கூறுவது உண்மையாயின் உலகம் இன்றுவரை தன் க்ஷீனதெசையைவிட்டு மீட்சி பெறாமலிருப்பதை யுணர்ந்து நல்லார் அழவேண்டுமல்லவா? சுயேச்சை, சமத்துவம், இன்றைய நவீனமுன்னேற்றம், நாகரீகம் ஆகிய திறந்த வெளியில் சமஉரிமை, சமஅந்தஸ்து என்னும் ஓசை புயல்காற்றைப்போல் சதா வீசிக்கொண்டிருக்கிறது. ஆயினும் சுயேச்சை, சமத்துவத்தின் உண்மையான அடிப்படையைக் கூட உலகம் இன்றுவரை அடையாதிருப்பது விசனத்தை மூட்டத்தக்க செய்தியல்லவா?

பொதுமக்களின் சுயேச்சைக்குரிய எந்தஜீவன் பிரான்ஸ்தேசத்துப்புரக்ஷியின் சிறகிலிருந்து பூமிக்கிறங்கியதாய் அறிவிக்கபபடுகிறதோ? அந்த ஜீவன் தோற்றத்தில் மிக்க அழகாயிருக்கின்றது. ஆயினும் அதற்குப்பூரண ஜயமேற்படவில்லை. ஆகவே ஐரோப்பா இன்னும் சுயேச்சையென்றால் இன்னது என்ற அறிவை யூட்டக்கூடிய பாடத்தைக் கற்கவேண்டிய தவசியமாகும். சமத்துவத்தையொட்டிய அறிவைப் பெறவேண்டியது இன்றும் மேல்நாட்டிற் கவசியமே. மனிதர்களின் உயர்பதவியை உணருவதற்காக மேல்நாடு இன்றைக்கும் முயல வேண்டித்தானிருக்கிறது. அல்லாஹுதஆலாவின் அடிமைகளான சமஅந்தஸ்தையுடைய மானிட ஜன்மத்தை வேற்றுமைப்படுத்தி அநியாயமாய் உயர்த்துவதும் தாழ்த்துவதுமான கேட்டைவிட்டு மனிதர்களை மீட்பதற்கான ஞானத்தை மேல்நாடு தேடிப் பிடிக்கவேண்டுமல்லவா? இவ்வெல்லாவற்றையும் மேல் நாட்டிற்கு இஸ்லாம் மட்டுமே கற்பிக்கக்கூடும். இருள் சூழ்ந்த முற்காலத்தைப் போலவே பிரகாசமுள்ள இக்காலத்திலும் மேல்நாடு இஸ்லாமை அறிந்துதான் ஆகவேண்டும். ஏனெனின்,

மனிதர்களின் அந்தஸ்தை விளக்கும் ஒளி இஸ்லாமின் சுவாதீனத்திலேயே இருக்கின்றது.

சுயேச்சை, சமத்துவம் ஆகியவைகளுக்குத் தாமேஉபாத்திபாயரென்று மேல்நாடு கூறுகின்றது. இக் கூற்றை நாம் ஏற்றுக்கொள்ளுவோம். ஆனால் இன்றுவரை அரசர்களின் சிரசில் தோன்றும் கிரீடத்தில் ஜ்வலிக்கும் நவரத்தினங்களின் சொந்தக்காரர்கள் யாரென்று கேட்போமல்லவா?

மேல்நாட்டார் தங்களின் அரசர்களுக்கும் பிரஸிடென்டுகளுக்கும், அவசியமானவைகளெனக் கருதும் வானத்தையளாவிய கட்டிடங்களும் மனதைக் கவரத்தக்க கூட கோபுரங்களும் ஆடம்பரபெருமை, உல்லாசவாழ்க்கை, சுகஜீவனம் ஆகியவைகளுக்குரிய அளவிறந்த சாதனங்களும், அரசர், பிரஸிடென்டு முதலியோருக்கு எங்கிருந்து கிடைக்கின்றன? அரசர்களின் கௌரவத்திற்கென்று சேகரிக்கப்படும் வஸ்த்துக்களுக்காக வியர்த்தமாகும் இரத்தங்கள் யாருடையது? அரசர்களின் கீர்த்திக்குரிய போர்வையை யாருடைய இரத்தத்தால் சாயமேற்றப்பட்டு வருகிறது?

மனிதர்களுக்குரிய சமத்துவத்தின் உண்மைக்கொள்கையை ஐரோப்பா தெரிந்துகொண்டதாக அறிவிக்கப் படுமாயின் அரசர்களுக்கும் பிரஜைகளுக்கும் இடையே இத்தகைய வித்தியாசம் இருந்து வருவதற்குக் காரணம்யாது?

அரசர்களின் கரங்களிலிருந்து எதேச்சாதிகார நிர்வாகத்தைக் கைப்பற்றிக்கொள்ளுவது மட்டும், சமத்துவ முறைக்குப் போதுமென இஸ்லாம் கருதவில்லை. சந்தேகமின்றி இஸ்லாமானது அரசர்களின் சிரசிலிருக்கும் கிரீடம், அவர்கள் வீற்றிருக்கும் சிம்மாசனம் ஆகியவைகளைக்கூடப் பிடுங்கிக் கவிழ்த்துவிட முயலுகின்றது. ஏனெனில் ஒரு மனிதன் சிலகாலத்திற்கு கலீபாவாக இருப்பதை முன்னிட்டு அவன் சிரசு முத்து நவரத்தினங்களால் மெழுகப்பட்டு லக்ஷக் கணக்கான மனிதர்களின் சிரசுகளில் வெறுந்தொப்பி மட்டும் இருந்துவருவதைப் பார்க்க இஸ்லாம் இஷ்டப்படவில்லை.

மதீனமா நகரில் வாழ்ந்து வந்த பரிசுத்தமான அரசரவர்கள் கயிற்றுக் கட்டிலில் நித்திரை கொள்ளுவார்கள். ஆகவே அவர்களின் தூய்மையான தேகத்தில் கயிறு பதிந்த வடுக்கள் காணப்பட்டன. மதீனமா நகர் அரசர் அவர்களின் பிரதி நிதிகள் ரோம், அஜம் முதலிய தேசங்களின் சிம்மாசனங்களைக் கவிழ்த்து விடும்படிகட்டளையிடுகிறவர்களாக விருந்த நிலைமையிலும், கிழிந்து போன கம்பளியை அணிகிறவர்களாயும், ஓலைக்குடிசையில் நித்திரை கொள்கிறவர்களாயுமிருந்தனர்.



தேசத்தின் பொக்கிஷத்திலிருந்து இன்று ஐரோப்பாவின் அரசர்களுக்கு விரையமாகும் சம்பளத்தொகையை உற்று நோக்குங்கள்.

பிரிடிஷ் அரசரின் மாதாந்தரச் சம்பளம்.

| | |
|---|---|
| பாக்கெட் செலவுக்காக | 110000, பவுன் |
| சிப்பந்திகளின் சம்பளத்திற்காக | 125800, ,, |
| வீட்டுச்செலவுக்காக | 192000, ,, |
| அரசரின் மாளிகை அலங்காரச் செலவுக்காக | 20000, ,, |
| தர்மம் இனும் ஆகிய செலவுக்காக | 13200, ,, |
| மற்றும் இதற செலவுக்காக | 800, ,, |
| கூடுதல் | 470000, ,, |

பவுனுக்கு ரூ. 15 ஆக ரூ. 7050000, ஆகிறது.

இளவரசருக்குக் கொடுக்கப்படும் 300000, மற்ற அரசகுமாரர்களுக்குக் கொடுக்கப்படும் தொகை ஆகியவைகள் தவிற அரசரின் சொந்தச் செலவுக்காக மட்டும் ரூ. 7050000, கொடுக்கப்படுகிறது.

ஜர்மன் அரசருக்கு மாதம் 9000000, கொடுக்கப்படுகிறது. மேல் நாட்டின் இரண்டு பெரிய அரசர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளத்தை ஓர் உதாரணத்திற்காக வரைந்திருக்கிறோம்.

முஸ்லிம் அரசர்களுக்கு இஸ்லாம் அளிக்கும் சம்பளத்தையொட்டி கவனம் செலுத்துவோம். இஸ்லாமிய அரசர்கள் தங்களின் சம்பளத்தை முன்னிட்டுச் செய்து கொண்ட கோறிக்கை என்ன?

### இஸ்லாமிய கலீபாக்களின் செலவு.

ஹஜ்ரத் உமர்ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒரு சந்தர்ப்பத்தில் தாங்களாகவே தங்களின் செலவைக் காட்டியிருக்கின்றார்கள் அதாவது:—“பைத்துல்மாலிலிருந்து (தேசத்தின் பொக்கிஷத்திலிருந்து) நான் எவ்வளவு பெற்றுக்கொள்ளத்தகுமென்பதை நானே அறிவித்துவிடுகின்றேன். உடை இரண்டு சோடிப்பு (இதில்) ஒன்று குளிர்காலத்திற்கு மற்றொன்று உஷ்ண காலத்திற்கு. “ஹஜ்ஜு” ‘உம்ரா’ ஆகிய கடமைகளை நிறைவேற்றுவதற்காக ஒரு வாகனம், குரைஷிகளுள் நடுத்தரமான ஸ்திதியையுடையவர்களின் உணவுக்கொப்ப எனக்கும் என்மனைவி மக்களுக்கும் சாப்பாட்டுச் செலவு ஆகியவைகளே; இதைத் தவிற பிறகு ஒரு தாழ்ந்த முஸ்லிமின் நிலைமையே என்நிலைமையுமாகும்” என்பதே.

(தொடரும்)

# முஸ்லிம் சமூகச் சீர்திருத்தம்.

(மௌலானா சையித்சுலைமான் நத்வி அவர்களெழுதியது)

கட்டுக்குலைந்த முஸ்லிம்களின் நிலையற்ற வாழ்க்கையைப்பற்றியும் இஸ்லாமிய உலகம் இன்று பல வகுப்புகளாகப் பிரிந்து சிதறுண்டு கிடப்பதைப்பற்றியும் முஸ்லிம்களின் இல்லத்தைப் பாதுகாக்கும் தலைவர்கள் அற்றுபோயிருப்பதைப்பற்றியும் முன் வரைந்துள்ளோம். (இவை முஸ்லிம்களின் க்ஷேமத்தைப் பாழ்பண்ணத்தக்க வியாதியென்பதை ஒப்புக்கொள்வோமாயின்) இவ்வியாதியைப் போக்கக்கூடிய சிகிச்சை 'கிலாபத்' 'இமாமதெ குப்ரா' என்னும் ஸ்தாபனத்தை ஸ்திரப்படுத்துவதாகும். வாய் வார்த்தையாய் மட்டுமின்றி உண்மையாகவே ஒழுங்கான முறையில் முஸ்லிம் சமூகங்களைக் கோர்வைபடுத்தக்கூடிய தலைவர் இருந்துவர வேண்டுமென்பதே அவ்விதஸ்தாபனத்தை ஏற்படுத்துவது, என்பதுள் அடங்கியிருக்கும் லக்ஷியம், அறிவு ஆகியவைகளின் அடிப்படையாகும். எல்லா முஸ்லிம் சமூகங்களும் தனித்தனியே தங்கள் தேசத்துக்குள் ஸ்திரமான முறையில் சீர்திருந்தவும் ஓர் உருவமாகவும் வேலைசெய்ய முற்படாதவரை 'கிலாபத்' அல்லது 'இமாமத்' அல்லது முஸ்லிம் சமூகங்களின் கூட்டுறவு என்பனவெல்லாம் வாய் வார்த்தையாய் மட்டுமே இருந்துவருமென்பதை நன்குணர வேண்டும். நூலில் போதிய மணிகளைக் கோர்க்காமல் ஓர் அழகிய பெரும் மணியை மட்டும் கட்டிவிட்டு இதுதான் "தஸ்பீஹ்மணி" என்று சொல்லலாமா?

இஸ்லாமிய உலகத்தில் சுயேச்சையுள்ள நாடென விளங்கும் தேசங்கள் இருவிதமாக விருக்கின்றன. இத்தேசங்களில் முதன்மையானவை துருக்கி, ஈரான், ஆப்கன், எமன், நஜ்த் முதலியனவாகும். இத்தேசங்கள் உண்மையாகவே சுயேச்சை, சுயாதிகாரமுள்ளனவாக விருப்பதோடு இத்தேசங்களில் முஸ்லிம்கள் ஜனத்தொகையில்பெரும்பான்மையினராயு மிருக்கின்றனர். இத்தேசங்கள் பலமெய்தி ஸ்திரமான முன்னேற்றத்தையடைய வேலை செய்யவேண்டும். இத்தகைய தேசங்களின் சீர்திருத்தம், முன்னேற்றம் ஆகியவைகளே இவைகளில் வசிக்கும் முஸ்லிம்களின் சீர்திருத்தமும், முன்னேற்றமுமாகும்.

இரண்டாவது மிஸர், இராக், ஷாம், ஹூரான், மராக்கோ, தூனிஸ், புகாரா, ஆஜர்பைஜான் முதலிய தேசங்களாகும். இவைபெயருக்குமட்டும் சுயேச்சையுள்ள நாடாக விருக்கின்றன. ஆதலின் இத்



தேசங்கள் உண்மையான சுயேச்சை சுயாதிகாரம் ஆகியவைகளைப் பெற முயற்சிக்கவேண்டும். மூன்றாவது சீனாவுக்குட்பட்டிருக்கும் "காஷ்கர்" பிரான்சுக்குட்பட்டிருக்கும் 'அல்ஜேரியா', ஹாலண்டுக்குட்பட்டிருக்கும் 'ஜாவா' ஆகிய தேசங்களில் முஸ்லிம்கள் பெருந்தொகையினராக விருந்தும் இவர்கள் ராஜீய விஷயங்களில் சுதந்திரமற்றவர்களாக இருந்து வருவதால், முதலாவதாக இத்தேச முஸ்லிம்கள் சுயேச்சையடைய முயற்சித்து சுதந்தர புருஷர்களான பிறகு இத்தேசங்கள் இஸ்லாமிய ஐக்கியமென்னும் கோர்வையில் சேர்ந்து கொள்ளலாம்.

நான்காவது இந்தியா, சீனா ஆகிய தேசங்களில் வசிக்கும் முஸ்லிம்களாகும். இவர்கள் உலகில் பெரும் துர் அதிர்ஷ்டர்களே. ஏனெனின்? ஒவ்வொரு இஸ்லாமிய நாடுகளிலும் வசிக்கின்ற முஸ்லிம் ஜனத்தொகையைக்காட்டினும் அதிக முஸ்லிம்கள் இவ்விரு தேசங்களில் வசித்து வருகிறார்களாயினும் இவர்கள் தங்கள் நாட்டில் பெருந்தொகையினரென்னும் அந்தஸ்த்தைப்பெற்றிருக்கவில்லை. இந்தியா, சீனா தேசமுஸ்லிம்களுக்கு ராஜீயசுதந்தரமும் தேசியசுதந்தரமும் அவசியமாக இருக்கின்ற நிலைமையிலும் மாறுபட்ட அபிப்பிராயங்கள் அதிகமாய் இருந்துவரும் இத்தேசங்களின் சீர்திருத்தமே இத்தேச முஸ்லிம்களின் சீர்திருத்தமுமென்று கொள்ளமுடியாது. ஆனதுபற்றியே இந்தியா, சீனா தேசவாசிகளான முஸ்லிம்கள் தங்களைச் சீர்திருத்தி அமைப்பதற்குரியவிஷயத்தில் மற்றநாட்டு முஸ்லிம்களைக்காட்டினும் அதிக கவனத்தைச் செலுத்தி விசேஷமாய் உழைக்கவும் வேண்டும்.

எதிர்காலத்தில் இந்தியா பிரிட்டிஷ் கொடிக்குட்பட்ட சுயாக்ஷியை அடைந்தாலும் சரி, அல்லது இதைவிட விசேஷமான ஜனநாயக ஆக்ஷியை யடைந்தாலும் சரி, அவ்வாக்ஷி ஓர் இஸ்லாமிய ஆக்ஷியாக இருக்கமுடியாது. மேலும் இத்தேசத்தை யொட்டிய சீர்திருத்தமே இந்திய முஸ்லிம்களின் சீர்திருத்தமுமாகாதென்று கூறுவது ஒரு மறைவான இரகசியமன்று. ஆகவே இது கூடியவரை உற்றுநோக்க வேண்டிய உண்மையல்லவா?

## டாக்டர் ஸைபுத்தீன் கிச்லுவின் தன்ஸீம் இயக்கம்.

நம் அருமைத் தோழரான டாக்டர் ஸைபுத்தீன் கிச்லுவும் அவருடைய சகாக்களும் 'தன்ஸீம்' என்னும் பெயரால் ஓர் அகில இந்திய சபைக்கு அஸ்திவாரமிட்டிருக்கின்றனர். இதன் கொள்கை, லட்சியம் ஆகியவைகளைப் பொருத்தவரையில் புத்திசாலியான எந்தமுஸ்லிமும் இவ்வியக்கத்தை ஆக்ஷேபிக்க முடியாது. ஆனால் அவர் 'தன்ஸீ'

மென்று நினைத்துக்கொண்டிருப்பவைகள் தன்ஸீமின் உட்பிரிவுகளே யன்றி மூலமன்றென்றும் 'தன்ஸீம் என்னும் விருக்ஷத்தின் கிளையேயன்றி அடிவேரன்றென்றும் "தன்ஸீமின்" பலாபலனே யன்றி அதன் தத்துவமன்றென்றும் நமது நண்பரின் சமூகத்தில் விஞ்ஞாபித்துக்கொள்ள விரும்புகிறோம். எல்லா முஸ்லிம் வகுப்பினர்களும் ஒன்றுபட்டு வாழவேண்டுமென்னும் வார்த்தையானது ஒருபுதிய செய்தியன்று. ஆனால் இவ்வார்த்தை "நத்வத்துல் உலமா" வின் பூர்வ ஓசையல்லவா?

அநாதைகளையும் விதவைகளையும் ஆதரிப்பது, மஸ்ஜிதுகளைப் பரிபாலிப்பது, முஸ்லிம்களின் பொருளாதார நிலைமையை உயர்த்துவது மத்ரஸாக்களையும் பள்ளிக்கூடங்களையும் ஏற்படுத்துவதுபோன்றவைகள் 'தன்ஸீ'மின் மூலமாய் நடைபெறும் காரியங்களாகும். ஆனால் இக்காரியங்களையே "தன்ஸீம்" என்று கூற முடியுமா? உண்மையான 'தன்ஸீ'மன்றி மேற்கூறிய நிர்மானதிட்டங்களைப்புரிய முயற்சிப்பதானது அஸ்திவாரமின்றி சுவர்வைப்பதை யொக்குமல்லவா? மேலும் சுவரேயில்லாமல் லாகடம்போடுவதுபோலவு மாகும்.

நமது நண்பர் அவருடைய பிரசங்கங்களில் "நான் தன்ஸீமின் பெயரால் புதிய செய்தியொன்றையும் கூறிவிடவில்லை. பதிமூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னுள்ள செய்தியைத்தான் மீண்டும் கூறுகிறேன்" என்று அடுத்தடுத்துக் கூறிவருகிறார். உண்மையும் அவ்வாறே, எனினும் இற்றைக்குப் பதின்மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த 'தன்ஸீம்' என்ன வென்பதைத்தான் நாம் கவனிக்க வேண்டியிருக்கிறது.

தன்ஸீமைப்பற்றி நம் பெரியார்களுக்கு அநேகமாய் கவனம் செல்லாதிருந்த காலத்திலும் "தன்ஸீமை"ப்பற்றிய சிந்தனை எனக்குப் புதிதல்ல. மிஸ்டர் 'மாண்டேகு இந்தியாவுக்கு விஜயம் செய்திருந்தபோது (லக்னௌ) பரங்கீமஹல்லாவின் அழைப்பிற் கிணங்க உலமாக்களின் சிறப்பான மகாநாடொன்று பரங்கிமஹல்லாவின் மாளிகையில் கூடிற்று. அரசாங்கத்தினிடம் நாம் கோறவேண்டியவைகளென்ன? வென்று அவ்வுலமாக்கள் ஆலோசித்தனர். குடிகாரர்களும், மதத்தைப் பின்பற்றாதவர்களும் சட்டசபையில் முஸ்லிம்களின் அங்கத்தினராக இருக்கக்கூடாதென்று அரசாங்கத்திற்குத் தெரிவித்துக் கொள்வதென உலமாக்களின் அம்மகாநாட்டில் முடிவு செய்யப்பட்டதாகக் கேள்வியுற்று அச்சந்தர்ப்பத்தில் அதாவது ஒன்பது வருடங்களுக்கு முன்பே இதே "மஆரி"பில் "இந்திய முஸ்லிம்



களின் சமூகச் சீர்திருத்தம்" என்னும் தலைப்பின்கீழ் எனது அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கிறேன். அதில் எல்லா இஸ்லாமிய ஆட்சி காலங்களிலும் விசேஷமாக இந்தியாவின் இஸ்லாமிய ஆட்சியிலும் இஸ்லாமிய நாடுகளில் இன்றும் முஸ்லிம் சமூகத்தைப் பொருத்த காரியங்களைக் கவனிப்பதற்குப் பிரத்தியேகமான இலாக்காவொன்று எவ்வாறு அரசாங்கங்களின் இதர இலாக்காக்களிலொன்றாக இருந்து வந்ததோ, இருந்தும் வருகிறதோ? அவ்வாறே இந்தியா கவர்ன்மெண்டும் முஸ்லிம் சமூக வேலைகளை கவனிக்கும் பித்தியேக இலாக்கா ஒன்றை நியமிக்கவேண்டுமென்றும், இதர இலாக்காக்களைப்போலவே இவ்விலாக்காவிற்கும் முறையே ஒவ்வொரு இடங்களிலும் கிளை ஸ்தாபனங்கள் அமைக்கப்பட வேண்டுமென்றும் அவ்விலாக்காவின் மூலமாக முஸ்லிம்களின் விவாகம், விவாகரத்து, விவாகப் பிரிவினை, அநந்தரம், முதலிய முக்கியமான காரியங்கள் முடிவுபெற வேண்டுமென்றும், மத்ரஸாக்கள் பள்ளிக்கூடங்கள் பொதுச் சொத்துக்கள் ஆகியவைகளின் பரிபாலனம், மஸ்ஜிதுகள், அவைகளின் "பேஷ் இமாம்" "முஅத்தின்" முதலானவர்களின் மேற்பார்வையும் அவ்விலாக்காவின் பொறுப்பாகவே இருக்கவேண்டுமென்றும் வற்புறுத்தி இருந்தேன். அக்காலம் வேறு. அக்காலத்தின் நிலைமைகள் வேறு. ஆனால் இப்பொழுது காலம் மாறுபட்டுவிட்டது. ஒத்துழையாமையின் சுவர் குறுக்கே நிற்கிறது. இப்பொழுது பொதுஜனங்கள் அரசாங்கத்தின் ஆதரவின்றி அவரவர்களின் வேலையை அவரவர்களே செய்துகொள்வதற்குத் தயாராகிவருகிறார்கள்.

ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்ட "தன்ஸீம்" திட்டத்தில் பல நன்மைகளிருந்தனவாயினும் அவைகளோடு அடிமைத்தனத்தின் புதிய தங்கமாலையொன்றும் பொதுஜனங்களின் கழுத்தில் விழுந்துவிடுமென்ற பயமும், அரசாங்கத்திற்குப் பணிந்து கேட்டிற்கிலக்காகும் உலமாக்களின் எண்ணிக்கை எதிர்பாராத விதமாய் அதிகரித்துவிடுமென்ற திகிலும் இருந்துவந்தன. இத்தியாதி காரணங்களால் தான் மேற்கூறிய "தன்ஸீம்" திட்டத்தை அரசாங்கத்தின் முன் ஆஜர்செய்வதில் தாமதமேற்பட்டுவந்தது.

## இஸ்லாமிய "தன்ஸீம்" இமாமத்தாகும்.

பதின்மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்த "தன்ஸீம்" தான் முஸ்லிம்களின் உண்மையான "தன்ஸீம்". அத்தன்ஸீம் வருமாறு:— முஸ்லிம்கள் பெரும்பான்மையினராக இல்லாத தேசத்திலும் இஸ்லாமிய அரசாங்கமில்லாததேசத்திலும் முஸ்லிம்கள் ஓர் "இமாமத்

தையோ'' அல்லது '' இமாரத்தையோ ஸ்தாபிக்கவேண்டும். இதற்கு மார்க்கசட்டங்களை அனுசரித்தே தேர்தல் நடைபெறவேண்டும். '' இமாமத்திற்கென்று பிரத்தியேகமான ஆலோசனைசபை ஒன்று மிருக்கவேண்டும். இச்சபையின் தீர்மானப்படி எல்லா ஜனங்களும் ஓர் அமீரிடத்தில் 'பைஅத்' என்னும் (விசுவாசப்பிரமாணம்) செய்ய வேண்டும். மேலும் இந்த அமீர், மதத்தையொட்டியிடும் கட்டளை களை அரசாங்கத்தின் உத்திரவுகளைப்போல் கண்டிப்பாய் ஏற்றுக் கொள்ளவேண்டும். அன்றியும் இத்தகைய அமீரின் உத்திரவை மீறு கிறவன் பாவியாகவும் சமூகக்கோர்வையை விட்டு நீங்கினவனுகவும் கருதப்படுவான்.

துர்அதிர்ஷ்டவசமாக ஐரோப்பாவின் அபிப்பிராயங்கள், ஆலோ சனைகள் வேலைத்திட்டங்கள், ஆகியவைகளையே பூரணமாகப் பின் பற்றி நிற்கின்ற நாம் எவ்வேலையைச் செய்ய முற்படினும் மேல்நாட்டின் அபிப்பிராயங்கள், அத்தேசத்தின் வேலைத்திட்டங்கள், ஆகிய வையே நம்முன் நிற்கின்றன. நாம் நமது சமூகத்தை ஐக்கியப்படுத்த விரும்பினுல் ஐரோப்பியர்கள் காண்பித்த வழியே நமது புத்திக் கெட்டுகிறது; சுதந்தரமென்ருல் அவர்களால் வர்ணிக்கப்படும் சுதந்தரந்தான் நம் மனதில் படுகிறது. நமக்குள் கட்டுப்பாடு வேண்டுமென்ருல் அவர்களுடைய '' ஆர்கனேஸேஷன் '' '' டிஸிப் ளின் '' என்னும் பதங்கள்தான் நமது ஞாபகத்திற்கு வருகிறது.

ஆனுல் '' உம்மதெமுஹம்மதிய்யா '' வின் '' தன்ஸீ ''மானது உம்மத்தின் ஸ்தாபகருடைய போதனைப் பிரகாரமே யிருக்க வேண்டுமல்லவா ? ஸர்க்காரெ உம்மத்தாகிய நாயகம் ஸல்லல் லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உம்மத்தோர்க்கு வேண்டிய எல்லா முறைகளையும் கற்பித்து அவைகளை அனுட்டித்தும் காட்டி யிருக்கின்ருர்கள். ஆகவே நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல் லம் அவர்கள் காட்டியுள்ள வழிச்சென்றே பழுதுபட்டுப்போன நம் சுவற்றை மராமத்துச் செய்துகொள்ளவேண்டும். ஹஜ்ரத் ஸர்கா ரெரிஸாலத் நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஜனனமான சமயத்தில் அரேபியாவிலிருந்த ஜனங்கள் நம்மைக் காட்டினும் அதிகக் கட்டுக் குலைந்தவர்களாயும், பகையில் மூழ்கினவர்களாயும், க்ஷீணித்தவர்களாயும், மிக கேவலமான ஸ்திதியில் சிக்குண்டவர்களாயு மிருந்தனர். ஆனுல் ஹஜ்ரதெ அன்வர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் சன்மார்க் கப் பிரசார முயற்சியாலும் ஆண்டவனின் பேராதரவாலும்



'' உருக்கிவார்க்கப்பட்ட கெட்டியான ஒரே சுவற்றைப்போலி ருக்கிருர்கள் '' (திருக்குர் ஆன்) என்பதற்கேற்ப அவர்கள் ஐக்கியப் பட்டுவிட்டனரல்லவா? பல கற்களைப்போலிருந்த அரபியர்கள் ஒன்று பட்டு ஈயத்தை யுருக்கிவார்த்து கட்டப்பட்ட சுவர்போன்ற உருவத் தைக் கொண்டுவிட்டனர். மேலும் தனித்தனி மனிதனென்பது மறைந்து அவர்கள் ஒவ்வொருவரும் சமூகமென்னும் ஒரே தேகத் தின் பல அங்கங்களாக அமைந்துவிட்டனர்.

## இஸ்லாமிய இல்லத்தின் உண்மை.

நாம் எதை '' தன்ஸீம் '' அல்லது சீர்திருத்தமென்று கூறு கிருேமோ ? அதை '' ஷரீஅத் '' அல்லது இஸ்லாமின் கருத்திற் கிணங்க முஹம்மத் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்ல மவர்களின் திருநாவு '' ஜமாஅத் '' என்று அருளியிருக்கின்றது. மேலும் '' தன்ஸீம் '' செய்வதற்கு '' ஜம் உ '' அல்லது '' '' ஜம் உ கலிமா '' என்றும் '' தன்ஸீம் '' ஏற்பட்டுவிட்டதற்கு ''இஜ்திமா உ'' அல்லது ''இஜ்திமா உகலிமா' என்றும் அத்திருநாவு மொழிந்திருக் கிறது. சீர்திருத்தமெய்தி அமைந்த '' ஜமாஅத் '' அல்லது கூட் டத்தின் தலைவரை ''இமாம்'' என்றும் ''அமீர்'' என்றும் இவருக்கு ஆலோசனை கூறும் சபையின் அங்கத்தினரை ''உலுல் அம்ர்'' என் றும் இஸ்லாம் அழைக்கின்றது. முஹம்மதுர்ரஸூலுல்லாஹி ஸல்லல் லாஹு அலைஹிவஸல்லம் அவர்களால் வற்புறுத்தப்பட்ட ''இதா அத்'' (வழிபடுதல்) இத்தகைய தலைவருக்குக் கட்டுப்படுவதாகும். இதையே இன்று (ஆங்கிலங்கற்ருேர்) ''டிஸிப்ளின்'' (Discipline) என்று கூறுகின்றனர்.

சுயேச்சையாய் உண்மையை யுரைப்பதற்கே ''கௌலுல்ஹக்'' (நியாயமொழி) என்று ''ஷரீஅத்'' அறிவிக்கின்றது. ஆகவே முஸ்லிம்கள் உயிர்வாழ விரும்பின் ''தன்ஸீம்'' என்னும் சீர்திருத்தத் தை அடையத்தான் வேண்டும். தன்ஸீமன்றி உலகில் வேறு எதை யும் இஸ்லாமிய ஸ்தாபனமென்று சொல்லிக்கொள்ள முடியாது. ஆயி ரக்கணக்கான வேலைகள் இன்று நம்முன் நின்கின்றன. ஒவ்வொரு வேலைக்கும் தனித்தனியே சபைகளும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. இச்சபைகள் பொது ஜனங்களின் செல்வாக்கைப் பெறவும் தங்களின் செலவுக்குப் பொருள் சம்பாதிக்கவும் மற்ற சபைகளோடு மோதிக் கொண்டும் போர்புரிந்துகொண்டு மிருப்பதைப் பார்க்கலாம். நம்வேலை களெல்லாம் யாசகத்தைக்கொண்டே ஆரம்பமாகின்றன. கற்களாலும்

சுண்ணாம்பினாலும் கட்டிடம் கட்டுவதிலும், யாசகத்தின் மூலமாய் நிதி திரட்டுவதிலுமே குறைந்தபக்ஷம் இரண்டு மூன்று தலைமுறைகள் வியர்த்தமாகி விடுவதோடு உண்மையான ஊழியர்கள் வேலை செய்ய சந்தர்ப்பம் கிடைப்பதுமில்லை. அல்லது மிகவும் குறைவான காலம் கிடைக்கிறது. இத்தகைய குறைகள் நமது நாசத்திற்குரியவைகள்லவா? இப்பெரும் இழியநிலைமையைப்போக்கி முன்னேற்றமடைய நாம் ஒழுங்கான முறையில் "ஜமாஅத்" என்னும் பொருள் தரத்தக்க கூட்டமாக நிலவும்பொருட்டு வேலைசெய்யவேண்டும். முக்கியமான இக்காரியத்தில் நமக்குச் சித்தியுண்டாகாதவரை நாம் ஒரு சமூகமாக வில்லாமல் வேற்றுமைப்பட்டு சிதறுண்டு கிடப்போமென்பது திண்ணம். முஸ்லிம்கள் ஒன்றுபட்ட சமூகமாக இல்லாமல் அனேக வகுப்புகளாயும் எண்ணிறந்த கோஷ்டிகளாயும் அளவற்ற 'பீர்'கள் 'மஷாயிக்,களின் 'மூரீத்'களாயும் ஒன்றுக்கொன்று முறண்பட்ட வெறும்கூட்டங்களாயும் இருக்கின்றவரையில் ஐக்கியப்பட்டுள்ள எச்சமூகத்தையேனும் எதிர்த்து வேலைசெய்ய முடியுமா?

"சாதாரணமாக ஐக்கியப்பட்டவர்களாகத் தெரிந்தாலும் அவர்களின் ஹிருதயங்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருக்கின்றன." என்று 'குர்ஆன்ஷரீபு' முஸ்லிம்அல்லாதாரை இழித்துக் கூறியதானது முஸ்லிம்களான நம் நிலைக் கொத்திருக்கிறதல்லவா?

"முஸ்லிம்களே! அல்லாஹ்வின் கயிற்றைபலமாகப்பற்றிப் பிடித்துக்கொள்ளுங்கள். ஒருவருக்கொருவர் பிரிந்துவிடாதீர்கள்." (அல்குர் ஆனின் வியாக்கியானம்) இவ்வாக்கியத்தின் மூலமாக உம்மதெ முஹம்மதிய்யாவின் சிதறுண்ட சக்தியை ஒன்று சேர்க்கப்பட்டிருக்கின்றது. மேலும் கட்டுப்பாடில்லாது வாழ்ந்துவந்தவர்களின் வாழ்க்கையை கைக்கொள்ளவேண்டாமென்று பின்வரும் வாக்கியத்தின் மூலமாய் தடுக்கப்பட்டிருக்கிறது.

"மேலும் ஒருவருக்கொருவர் மாறுபட்டுப் பிரிந்து கிடந்தவர்களைப்போலவும் அல்லாஹுதஆலாவின் பஹிரங்கமான கட்டளைகள் வந்தபின்னும் வேறுபட்டிருந்தவர்களைப் போலவும் ஆகிவிடாதீர்கள். அவ்வாறு செய்தவர்களுக்குக் கடுமையான தண்டனைகளுண்டு," (அல்குர் ஆனின் வியாக்கியானம்,)

மறுமையில் (ஆகிரத்தில்) ஏற்படவிருக்கும் தண்டனைமட்டுமின்றி வேறுபட்டோர் இம்மையிலும் சென்றவிடமெல்லாம் சீரழிந்து நிலையற்று கஷ்டம், நஷ்டம் ஆகிய கேட்டிற்கிலக்காக வேண்டும். மேலும் இவர்கள் சமூகமென்னும் கட்டுப்பாட்டைக் கொண்டிராமல்



ஏகோபித்து எதையும் செய்யமுடியாமல் நல்லுணர்ச்சியற்று மிருப்பார்கள். எத்தகைய எதிரிகளும் இவர்களை மதிக்கமாட்டார்கள். இவ்விபரீத நிலைமையை யெடுத்துக்காட்டி "குர்ஆர்ஷரீப்" எச்சரித்திருப்பதாவது :—

"அல்லாஹ்வுடையவும் அவனது ரஸூலுடையவும் உத்திரவுகளை யேற்றுக்கொள்ளுங்கள், உங்களுக்குள் சண்டைசெய்து கொள்ளாதீர்கள். இன்றேல் நீங்கள் பலம் குன்றினவர்களாவதோடு உங்களுடைய காற்றும் வியர்த்தமாகிவிடும்." (அல்குர்ஆனின் வியாக்கியானம்)

(தொடரும்)

---

# தப்புகள் அடிப்பதும் பொதக்குடியின் தப்பான பத்வாவும்.

(கூத்தாநல்லூர் ஜம்இய்யத்துல் உலமா சபையார் எழுதியது)

முஸ்லிம்களே!

பொதக்குடி, கூத்தாநல்லூர் முதலியவிடங்களில் நிகாஹுகளிலும் மற்றவேளைகளிலும் சில வாலிபர்கள் பாடிக்கொண்டு அதற்கேற்ப தப்புகள் அடிக்க ஆரம்பித்திருக்கின்றனர். பாடல்களையும் பைத்துகளையும் பாடிக்கொண்டு அதற்குத் தோதாய்த் தாளம்போட்டு தப்புகள் அடிப்பது நிகாஹுகளைப் பகிரங்கப்படுத்துவதற்குங்கூட ஆகாதென்று உலமாக்கள் விலக்கி வந்தார்கள். ஆனால் மேற்கூறப்பட்ட ஊர்களில் பொதக்குடி மத்ரஸாவின் தலைமை உஸ்தாது மௌல்வி அப்துல்கரீம் சாகிபு அவர்கள் பாடிக்கொண்டு தப்பு அடிப்பது ஆகுமென்று சொல்லுகிறதை அனுசரித்து அடிக்கிறோமென்று கூறிவந்தார்கள். ஆகையால் ஷை மௌல்வி அப்துல்கரீம் சாஹிபவர்களிடம் இது சம்பந்தமாக கோ. மு. முகம்மது காசீம் சாஹிபால் ஓர் வினா கேட்கப்பட்டது. அவ்வினாவின் சாரமாவது :—

"சில வாலிபர்கள் நிக்காஹு இரவுகளில் கூலி பேசிக்கொண்டும் தப்புகளைக் கையில் எடுத்துக்கொண்டு பைத்துகள் பாடல்கள் பாடிக்கொண்டும் அதற்குத் தோதாய் அத்தப்புகளை அடித்துக்கொண்டும் ஊர்வலம் சுற்றி வருகிறார்கள். இத்தகைய செயல் நமது மார்க்கத்தில் ஆகுமா? ஆகாதா! என்பதே.

இவ்வினாவிற்கு ஷை மௌல்வி சாஹிபவர்கள் ஜவாபாக, "கலியாண இரவு அதைப் பிரபல்யப்படுத்துவதற்காகத் தப்புகள் அடிப்பது ஆகுமென்று "கன்சு"டையஷரஹிலும் 'ரத்துல்முக்தா'ரிலும் வருகிறது என்றும், தப்பு அடிப்பது ஆகாதென்று சொன்னவருடைய

சொல்லை ஒப்புக்கொள்ளக்கூடாதென்று 'ஷரஹ்விகாயா' வுடைய ஹாஷியாவில் வருகிறது" என்றும் எழுதி, கோட்டார் M. அப்துல் கனிய்யி சாஹிபின் கைச்சாத்திட்டு பத்வாகொடுத்தார்கள். இது விஷயமாய் கோ. மு. முகம்மதுகாசீம் சாஹிபுக்குச் சந்தேகம் ஜனித்து மற்ற உலமாக்களின் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி ஸைபுல் இஸ்லாம் 29—8—25-ம் தேதி பத்திரிகையில் கேட்டிருந்தார்.

அதற்காக M. அப்துஸ்ஸமது சாஹிபு ஏர்க்கனவே உலமாக்களால் கொடுக்கப்பட்டிருந்த பத்வா ஒன்றை 2—9—25-ம் தேதி ஸைபுல் இஸ்லாத்தில் வெளியிட்டிருக்கிறார்கள். அதன் சுருக்கம் வருமாறு :—"கல்யாணத்தைப் பிரபல்யப்படுத்துவதற்காகத் தப்பு அடிப்பது பாதகமல்லவென்று கன்ஸுடையஷரஹில் வருகிறது. ஆனால் அந்த தப்பு, விளையாட்டுக்காகவும் பெருமைக்காகவும் இல்லாமலிருக்கவேண்டும். இன்னும் அதற்குச் சலங்கையிருக்கக் கூடாதென்பதோடு இராகம்பாடும் விதமாகவும் அடிக்கக்கூடாதென்று 'ரத்துல்முக்தார்' 'பாவாயிதுல் முஹத்தப்' என்னும் கிதாபுகளில் வருகிறது."

இந்த பத்வாவில் மதறாஸ், வேலூர், மதீனா ஆகிய தேசங்களின் 16-உலமாக்கள் கையொப்பமிட்டிருக்கிறார்கள்.

மேலும் அல்லாஹுதஆலாவின் திக்ரையும் நாயகத்தின் புகழையும் பொதிந்தபாடல் பைத்துகளைப் பாடிக்கொண்டு தப்பு அடிப்பது குப்ருக்கு முடிகியபாவமாய் இருக்குமென்று 'ஷரஹ்பிக்ஹுல் அக்பரில் வருவதாகவும் இந்த பத்வாவை வெளியிட்ட M. அப்துஸ் ஸமத்சாஹிப் வரைந்திருக்கிறார். இந்நிலைமையில் "இராகத்துடன் தப்பு அடிப்பது ஹறாமல்லவென்று ஷரஹ் விகாயாஉடைய ஹாஷியாவிலும், "ஈளா"ஹிலும் வருவதாகவும் இதுதான் ஹக்கான சொல்லென்றும், உலமாக்கள் அவ்விதம் தப்பு அடிப்பதை ஆகாதென்று சொன்னது பாத்திலானதென்றும்" வரைந்து உலமாக்களின் பத்வாவை மறுத்து M. அப்துல் கனிய்யி சாஹிப் 17-9-25-ல் ஒரு துண்டுப்பிரசுரத்தை வெளியிட்டிருப்பதால் இந்தப் பிரசுரத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்து உண்மையை வெளியிடாவிடின் மஸ் அலாக்களையறியாத சாதாரண ஜனங்கள் ஏமாந்து போவார்களல்லவா ?

கலியாணத்தில் இராகம் பாடிக்கொண்டு தப்படிப்பதாகு மென்பதற்கு பொதக்குடி உலமாக்கள் 360, 370, கிதாபுகள் ஆதாரங் காட்டத் தயாராயிருப்பதாகக் கூத்தாநல்லூரில் பறைசாற்றப் பட்டிருந்தும் ஜனாப் M. அப்துல்கனிய்யி சாகிப் தம் நோட்டீஸில் இரண்டு கிதாபுகள் மட்டுமே ஆதாரங் காட்டியிருக்கிறார். அதில் ஒன்று லக்னௌ அப்துல் ஹைமௌலானா அவர்களால் எழுதப்பட்ட ஷரஹு விகாயாவின் ஹாஷியா 'உம்தத்துர்ரி ஆயா'வாகும். இரண்டாவது "ஈளாஹு" இவை இரண்டிலும் கூறப்பட்ட விஷயங்கள் இவரின் நோக்கத்திற்கு ஒத்ததாயில்லை அப்துல் ஹைமௌலானா அவர்கள் ஷி உம் தத்துற்றி ஆயாவில் கூறியிருக்கும் வியாசத்தை முதலில் தருகிறோம்.

அஃதாவது:—

"இந்தமஸ்அலாவில் உலமாக்கள் பலவித அபிப்பிராய முடையவர்களாயிருக்கிறார்கள். பொதுவாய் இராகம் பாடுவதாகா தென்பதற்கு முகாந்தரமில்லை. இராகம் பாடுமிடத்தில் அடிக்கும்படியான கருவிகளில் தப்பைத்தவிற மற்ற ஹறானமான வீணைக்கருவிகள் இராகத்துடன் சேர்ந்திருக்குமாயின் இராகம் பாடுவது ஹராமாயிருக்கும். ஏனெனில்? தப்பைத்தவிற மற்ற வீணைக்கருவிகள் ஹராமென்று ஸஹீஹான ஹதீதுகள் வந்துவிட்டன. தப்படிப்பதை ஹராமென்றோ, பொதுவாய் இராகம்பாடுவது ஹறாமென்றோ? கூறுவோரின் வார்த்தை எடுத்துக்கொள்ளக்கூடிய தல்லவென்பது போலவே எல்லா வீணைகளும் ஆகுமென்போரின் கூற்றையு மெடுத்துக்கொள்ள முடியாது. இது சம்பந்தமான விபரத்துக்கு வேறு இடமுண்டாயிருக்கிறது" என்பதே. (ஷரஹ்விசாயாவின் ஹாஷியா இரண்டாம் ஜில்து 284-ம் பக்கம்)

இவ்வியாசத்தின் கடைசியாய இதின் விபரம் வேறு இடத்திலெழுதப்படுமென்று கூறியிருப்பதன் கருத்தாவது :—

இது ஹராமான வீணைகளுடன் பாடுகின்றவர்களை எச்சரிப்பதற்காக ஹத்து செய்யும் வாசகமேயன்றி வீணைகளைப்பற்றி விபரிக்கும் பாடமன்று. ஆதலின் அதற்குச் சொந்தமான இடம் வாய்க்கும் பொழுது அதைப்பற்றி விவரமாய் எழுதுவோ மென்பதாகும். விபரமில்லாத இத்துண்டு வியாசத்தில், இராகம் பாடுமிடத்தில் தப்பு அடிப்பது ஹராமில்லையென்று கூறியிருக்கிறார்கள். ஆனால் பாட்டுப்பாடி அதற்குத் தோதாய் தாளம்போட்டு தப்படிக்கிறதா? அல்லது பாட்டு முடிந்தவுடனே தாளக் கட்டின்றி தப்படிக்கிறதா? நிகாஹின்போது அடிப்பதா? அல்லது வேறு நேரங்களில் அடிப்பதா? என்னும் விஷயங்கள் மௌலானா அவர்களுடைய இத்துண்டு வியாசத்தில் விபரிக்கப்படவில்லை. இதில்

இத்தகைய இன்னும் அநேக விபரங்களு மிருப்பதால்தான் இது சம்பந்தமான விபரங்களை அறிவிப்பதற்கு வேறு இடமுண்டென்று மௌலானா அவர்கள் வரைந்துவிட்டார்கள். இவ்வித விபரமில்லாத வியாசங்களை அத்தாக்ஷியாகக் கொண்டு பத்வா கொடுக்கலாமா? என்பதை முதலில் கவனிக்கவேண்டி யிருக்கிறது. கனம் அப்துல் கனிய்பி சாகிபுக்கு இராகத்துடன் தப்படிப்பது ஆகுமென்பதற்கு முக்கியமான அத்தாக்ஷி இது ஒன்றேயாகும்.

ஷைலக்னௌ அப்துல்ஹைமௌலானா அவர்கள் உம்ததுர்ரிஆயாவின் முன்னுரை பத்தாவது பக்கத்தில், பத்வாகொடுப்பவர்கள் கவனிக்கவேண்டிய விஷயங்களை விபரிக்குமிடத்தில் அடியில்கண்டவாறு எழுதியிருக்கிறார்கள். அதாவது:—விபரமில்லாத கிதாபுகளிலிருந்து சனதுகாட்டி பத்வாகொடுப்பது ஜாயிஸ் ஆகமாட்டாது. அதுவிஷயமாய் எழுதப்பட்டவிபரங்களைக் கவனியாமல் பத்வா கொடுத்துவிடுவோனாயின் தவறில் விழுந்துவிடக்கூடுமென்பதே. விபரமில்லாத கிதாபுகளிலிருந்து பத்வாகொடுப்பது ஆகாதென்றிருக்கும்போது விபரமற்ற ஒருதுண்டுவியாசத்தைக் கொண்டு பத்வாகொடுப்பதெங்ஙனம்? மௌலானா அவர்களே இந்த வியாசத்தில் விபரமில்லையென்று குறிப்பிட்டிருக்கும்போது அதை ஆதாரங் காட்டிக்கொடுத்த "பத்வா" மௌலானா அவர்களின் சொல்லைக்கொண்டே ரத்தாகிவிட்டது. இவைகளை அறியாமல் அப்துல் கனிய்பி சாகிபு, புகஹாக்களால் விபரமாய் பல அத்தாக்ஷிகளைக் கொண்டு கொடுக்கப்பட்ட பத்வாவை பாத்திலானதென்று எழுதியது பெருந்தவறல்லவா?

(தொடரும்.)

---

## நஜ்தியர் மதீனமா நகரைக் கைப்பற்றிக் கொண்டனர்.

நஜ்தியர் மதீனமா நகரையடைந்து விட்டதாகப் பன்முறை செய்திகளெட்டி அவை மறுக்கப்பட்டிருப்பினும் கடைசியாய் சுல்தான் இப்னு சுஊத் அவர்களின் புதல்வர் 'அமீர்முஹம்மத்' தமது சைனியங்களோடு சென்று மதீனமா நகரைச் சுவாதீனம் செய்து கொண்டு விட்டார்கள். "ஹிஜாஸை என் ஆதிக்கத்திற் குட்படுத்தி அதில் என் செல்வாக்கை ஸ்தாபித்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் என் உள்ளத்தில் கிடையாது. இஸ்லாமிய உலகத்தின் உத்திரவுக்குக் கட்டுப்பட்டு ஹிஜாஸை பரிபாலிக்கத்தக்கவர்கள் முன்



வந்து என்பொறுப்பை ஏற்றுக்கொள்ளும்வரை இப்புனிதபூமி என்னிடம் அடமானமாக விருக்கும்" என்று களங்கமின்றி பகிரங்கமாய் அறிவித்துவரும் சுல்தான் இப்னு சுஊத் அவர்கள் மதீனமாநகரைக் கைப்பற்றியது இஸ்லாமிய உலகத்தின் பேரதிர்ஷ்ட மல்லவா?

"நவம்பர்மீ 26உ நஜ்தியர் மதீனமா நகரில் பிரவேசிப்பார்கள்" என்று நம் கிலாபத்துத் தூதுவர் இந்தியாவுக் கறிவித்தார்கள். ஆகவே பலவருடகாலமாய் மதீனமாநகரைச் சூழ்ந்திருந்த இருள் நவம்பர்மீ 26உ அகன்று அந்நகர் பிரகாசத்தை யெய்துமென்று எதிர்பார்த்திருந்தோம். ஆனால் இஸ்லாமிய உலகத்திற்குச் சாதகமானசெய்தியை வெளியிட இஷ்டப்படாத ராய்டர் கம்பெனியார், இத்தகைய செய்தியைக் கூடியவரை மறைத்துவைப்பது சகஜமே. மதீனமாநகரை நஜ்தியர் கைப்பற்றிக்கொண்டார்களென்னும் செய்தி டிசம்பர்மீ 10உ 'லண்டன்' வழியாக இங்கு எட்டியிருப்பினும் இது இஸ்லாமிய உலகத்திற்குப் பெரும் மகிழ்ச்சியைத் தருமென்பதிலையமில்லை. அகில இந்தியகிலாபத்துத் தூதுவரின் இஷ்டத்திற்கேற்ப மதீனமாநகரைச் சீர்திருத்திப் பரிபாலிக்கும்படி சுல்தான் இப்னு சுஊத் அவர்கள் இந்நகரைக் கைப்பற்றுவதற்காக அனுப்பிய சைனியத்தின் தலைவரான தம் புதல்வருக்குக் கட்டளையிட்டிருப்பது இந்திய முஸ்லிம்களுக்குப் பெருமையல்லவா?

இந்திய முஸ்லிம்களுக்கு இத்தகைய உயர்வை சம்பாதிப்பதற்குச் சென்ற தூதுவர்களின் பிரயாணச் செலவுக்காகச் சேகரித்த நிதியில் பங்கெடுத்துக்கொள்ளாத முஸ்லிம்கள் இனியேனும் கண்ணைத்திறந்து பார்க்கமாட்டார்களா? இஸ்லாமிய விரோதிகளினிஷ்டம்போல் நடிக்க வெட்கப்படாத அமீர்அலியும் இவரைச் சார்ந்தோரும் நஜ்தியர்மீது பலபழிகளைச் சுமத்திவந்தனர். நஜ்தியர், ஹம்ஜா ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கோரியை இடித்து விட்டார்களென்றும், இவர்களின் குண்டுப்பிரயோகத்தால் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் ரௌலாஷரீபை யொட்டிய மினராவுக்குப் பின்னமேற்பட்டு விட்டதென்றும் கூறி நஜ்தியரைத் தூற்றினர்.

ஆனால் கிலாபத்துத் தூதுவர் அனுப்பிய செய்தியின்மூலமாய் அமீர் அலி முதலியோரின் பொய்க் கூற்று ரத்தாகிவிட்டது.

மேலும் கான்பூரில் நடைபெற்ற அகிலஇந்திய கிலாபத்துக் கான்பரன்ஸில் அக்கிராசனம் வகித்தமௌலானா அபுல்கலாம் ஆஜாத் அவர்கள் தங்களின் அக்கிராசனப் பிரசங்கத்தில் ஹிஜாஸைப்பற்றி

யும் கிலாபத்கமிட்டி இருந்து வரவேண்டிய அவசியத்தைப்பற்றியும் கூறியுள்ளதை ஒவ்வொரு முஸ்லிமும் வாசித்துஉண்மையை நன்குணரவேண்டும்.

மேலும் சுல்தான் இப்னு சூஊத் அவர்கள் முஸ்லிம் மன்னர்களுக் கனுப்பியிருக்கும் அழைப்புக் கடிதத்தைப் பார்க்க அளவிறந்த சந்தோஷ முண்டாகிறது.

இஸ்லாமிய விரோதிகளின் அதிக்கிரமத்தால் விழித்த முஸ்லிம்கள் நித்திரைக் கொள்ளாமல் காப்பாற்றி எஞ்சியுள்ள இஸ்லாமிய நாடுகள் சீக்கிரத்தில் விழித்துக்கொள்ளவும் அல்லாஹுத ஆலா கிருபை செய்தருள்வானாக.

---

## ஜித்தாவை "அமீர் அலீ" காலி செய்து விட்டார்.

அமீர்அலீ ஜித்தாவை நீண்டகாலம் வைத்திருக்க முடியாதென்று வந்துகொண்டிருந்த செய்திகள் மதீனமாநகரம் சுல்தான் இப்னு சூஊத் அவர்களின் சுவாதீனமான பிறகு மறுக்க முடியாத நிலையையடைந்து சுல்தான் இப்னுசூஊத் அவர்களின் சைனியம் எத்தகைய போருமின்றி ஜித்தாவைக் கைப்பற்றிக்கொண்டது. அமீர் அலீ ஒரு பிரிட்டிஷ் கப்பலிலேறிச்சென்று விட்டார். ஷரீப்ஹுஸைனின் புதல்வரான அமீர்அலீ ஹிஜாஸின் பூமியில் தங்கமுடியாது போகவே அவருக்கு அடைக்கலமளித்து ஏற்றிச்செல்ல பிரிட்டிஷ் கப்பல் தயாராகவிருந்தது. பிரிட்டிஷாரின் இவ்வுபகாரம் அமீர் அலீயின் ஊழியத்தை முன்னிட்டதா? அல்லது இவரின் தந்தையான ஷரீப்ஹுஸைனின் ஊழியத்தை முன்னிட்டதா? வென்பதை அல்லாஹுதஆலா நன்கறிவான். அமீர் அலீயும் சிலகாலம் ஹிஜாஸின் அரசராக வீற்றிருந்து கடைசியாய் ஜித்தாவை விட்டேகினர். இவர் பக்தாதுக்குச் சென்றதாயும் அறிவிக்கப்படுகிறது. இவர் வாசத்தையொட்டிச்செய்யப்போகும் ஏற்பாடுகள் இனிதெரியவேண்டும். ஷரீப் ஹுஸைன் வசிப்பதற்கு இதுவரை உள்ளங்கையளவு பூமிகூடகிட்டாதிருக்கும் ஸ்திதியில் அமீரலியைப்பற்றி பிரஸ்தாபிக்கவேண்டிய அவசியமில்லை. அமீர்அலீ ஜித்தாவை விட்டேகினதற்குப் பிறகு ஹிஜாஸ் முழுவதும் சுல்தான் இப்னுசூஊத் அவர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டுவிட்டது. அமீர் அலி இஸ்லாமிய உலகத்தின் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டிருப்பாராயின் அவர் ஏதேனுமொரு நல்ல ஸ்தி



யையடைந்திருக்கலாம். ஆனால் இன்று அமீர்அலீக்கு நம்பிக்கையளிக்கத்தக்கச் செய்தியுண்டா? ஹிஜாஸைச்சார்ந்த் சரித்திரத்தின் ஒருபாகம் முடிவுபெற்று இன்று மறுபாகம் ஆரம்பமாகிவிட்டது. சரித்திரத்தில் ஹிஜாஸையொட்டிய விஷயத்தைத் தங்கத்தால் வரையும்படிச்செய்வது சுல்தான் இப்னுசூஊத் அவர்களைப் பொருத்த காரியமாகும். சுல்தான் அவர்கள் இதுவரை வெளியிட்டிருக்கும் செய்திகளும் வாக்குறுதிகளும் விசேஷ நம்பிக்கையை அளித்து வருகின்றன. இன்ஷா அல்லாஹுதஆலா சமீபத்தில் ஹிஜாஸில் உண்மையான இஸ்லாமிய ஆக்ஷி நிலவப்போகின்றது.

---

## கிலாபத்துத் தூதுவோரும் மதீனமா நகரமும்

ஹிஜாஸுக்குச் சென்றிருக்கும் அகில இந்திய கிலாபத்துக் கமிட்டியின் தூதர்கள் மதீனமாநகர், நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பரிசுத்தமான ரௌலாஷரீப் முதலியவைகளைப்பற்றி அனுப்பிய செய்திவருமாறு:—

"மதீனமாநகரில் (ஷரீப்)அமீர்அலியின் சைனியம் டிசம்பர்மீ 4உ ஆயுதங்களைத் துறந்து விட்டது. நஜ்தியர் டிசம்பர்மீ 10உ "அலா"வையும், 13உ "அல்வஜா"வையும், 14உ "தபூக்" "லியா" ஆகியவைகளையும் கைப்பற்றிக்கொண்டனர். "என்பூ"விலிருந்த (ஷரீப்) அமீர்அலியின் கவர்னர் எங்கேயோ ஓடிவிட்டதாக அறிவிக்கப்படுகின்றது. அவ்விடத்திலுள்ள அமீர் அலியின் சைனியங்கள் சீக்கிரம் ஆயுதங்களைத் துறந்துவிடுமென எதிர்பார்க்கப்படுகிறது. குண்டுமருந்துகளும், ரயில்வேயின் அநேக சாமான்களும், ஐந்து ஆகாயதந்தி செட்டுகளுக்குரிய வஸ்துக்களும் நஜ்தியர்களின் வசமாயின. அமீர் முஹம்மது டிசம்பர்மீ 6உயும், நாங்கள் டிசம்பர்மீ 10உயும் மதீனமாநகருக்குள் சென்றோம். நாங்கள் ஜும்ஆவின் தொழுகையை மதீனமாநகரில் நிறைவேற்றினோம். அந்தொழுகையில் எல்லா நஜ்தியர்களும் சம்பந்தப்பட்டிருந்தனர். அமீர் முஹம்மதவர்கள் மதீனமாநகரின் இமாம் அவர்களுக்கு ஓர் அங்கியைச் சன்மானம் செய்தார்.

நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பரிசுத்தமான ரௌலாஷரீபைச் சார்ந்த மினாராவில் பின்னமேற்பட்டிருப்பதாக வெளியிடப்பட்டச்செய்திகள் பொய்யும் ஆதாரமற்றதுமாகும். மிகவும் கவனித்துப்பார்த்ததில் ஒரு மினாராவில் இரண்டு துப்

பாக்கிரவைகள் பட்ட அடையாளங்கள் தென்பட்டன. அவை அமீர் அலிசைனியத்தின் தலைமை ஸ்தானத்திலிருந்துத் துப்பாக்கிப்பிரயோகம் செய்யப்பட்டதன் மூலமாய் ஏற்பட்டனவாகும். பதவிகள் அமீர் அலியின் பகைவராக இருக்கின்றனர்...........................................

ஸையிதினா ஹம்ஸா ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கோரிக்கு எத்தகையக்கெடுதியும் ஏற்படவில்லை. ஆனால் சிறப்புற்ற சமாதியைச்சுற்றியுள்ள இரும்புக்கிராதியின் அலங்காரத்திற்காக வைக்கப்பட்டிருந்த இரண்டு குமிழ்கள் உடைபட்டதோடு ஸையிதினா ஹம்ஸாரலியல்லாஹு அன்ஹு அவர்களின் சமாதியையடுத்துள்ள ஹஜ்ரத் "உகைல்" ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் சமாதியைச் சார்ந்தமேடையில் கொஞ்சம் பழுதேற்பட்டிருந்தது. ஆயினும் அவைகள் மராமத்துச் செய்தாகிவிட்டன.

இச்சமாதிகளுக் கெதிரே "அபூதர்ருமஸ்ஜித்" என்று விளங்கிவரும் ஒருமேடைக்கும் நஷ்டமேற்பட்டது. ஆனால் மற்ற சமாதிகள் கோரிகள் சரித்திரப்பூர்வமானச் சின்னங்கள் முதலியவைகளுக்கு எத்தகையக்கெடுதியுமேற்படாதவாறு நல்லஸ்திதியிலிருக்கின்றன. நஜ்தியர்களின் சுவாதீனதிலிருந்த ஹம்ஸாரலியல்லாஹு அன்ஹு அவர்களின் 'மஸ்ஜித்' 'கோரீ' ஆகியவைகளுக்கு அமீர் அலி சைனியங்களின் குண்டுப்பிரயோகத்தால் ஓர் அளவு பின்னமேற்பட்டது. மதீனமாநகரின் பாதுகாப்புப் பட்டினத்தை யடுத்திருந்த இந்தியர்களின் வீடுகளையும், மேலபுகாரியர்களின் வீடுகளையும் அமீர்அலியின் சைனியம் பாழாக்கி விட்டது. அமீர்அலி சைனியத்தின் கமாண்டராகிய அப்துல் மஜீத் என்பவரை விசாரித்தபோது அவர் தம்முடைய இச்செய்கை நியாயமானதென்று கூறினார்.

மதீனமாநகருக்குச் செல்லும் மாதர்களை இழிவானமுறையில் சோதனையிட்டதும், ஷரீப் ஹுஸைன், அமீர் அலி ஆகியவர்கள் ஹரமெநபவியின் விரிப்பு, ரொக்கம் முதலியவைகளை அபகரித்துக்கொண்டு போனதும் உண்மைதான் என்று மதீனமாநகரின் முக்கியஸ்தர்கள், ஹரமின் உத்தியோஸ்தர்கள், லக்னௌவைச் சார்ந்த மௌலானா அப்துல் பாரீ முதலிய பலர் கூறுகின்றனர்.

மதீனமாநகரை " ஷர்கெஅர்து " னோடு சேர்த்துவிட அமீர் அலியின் சகாக்கள் முயற்சித்து வந்ததாய்ச் சிலபத்திரங்கள் மெய்ப்பிக்கின்றன.

அமீர்முஹம்மது அவர்கள் மதீனமாநகரவாசிகளைச் சகோதர வாஞ்சையோடு நடத்திவருகிறார். மேலும் அவர்களுக்குவேண்டிய உதவிகளைப் புரிகின்றார். மதீனமாநகர வாசிகளின் கஷ்ட நிஷ்டூரங்கள் அளவுகடந்தனவாக விருக்கின்றன. ஆகவே நாங்கள் 4000, ரூபாயைக் கொடுத்து அன்னமளிக்கும் ஸ்தாபனத்தை ஏற்படுத்தியிருக்கின்றோம். இதை ஒரு கமிட்டி கவனித்து வருகிறது. முனிஸிபல் பிரஸிடெண்டாகிய ஷைகுல்ஹரம், மௌலானா அப்துல்பாரீ (லக்னௌ), ஷைக்முஹம்மத்ஹஸன் (ஸம்மா), ஸையித்மஹ்மூத் (பைசாபாத்), முஹம்மத்ஹுஸைன் ஆகியவர்கள் இக்கமிட்டியின் அங்கத்தினர்களாகும். பணம் அனுப்பக் கருதுவோர் இவர்களுக் கனுப்பலாம்"

(1) ஜபரலிகான்.
(2) முஹம்மது இர்பான்.
(3) ஷுஐப்.



---

# நஜத்சுல்தான் அவர்களும் முஸ்லிம் மன்னர்களும்.

ஹிஜாஸின் பரிபாலனத்தை யொட்டித் தக்கஏற்பாடுகளைச்செய்வதற்காக ஹிஜாஸில் நடைபெறவிருக்கும் முஸ்லிம் உலக மகாநாட்டிற்கு முஸ்லிம் மன்னர்கள் தங்களின் பிரதிநிதிகளை அனுப்பவேண்டுமென்றும் அம்மகா நாட்டை எவ்வமயம் நடத்துவது உசிதமென்பதைத் தெரிவிக்கவேண்டுமென்றும் கோறி சுல்தான் அவர்கள் முஸ்லிம் மன்னர்களுக்குக் கடிதமெழுதி யிருக்கின்றார்கள். மேலும் அக்கடிதத்தில் ஹிஜாஸின் பரிபாலனத்தை யொட்டி சுல்தான் அவர்கள் வெளியிட்டிருக்கும் அபிப்பிராயம் வருமாறு :—

(1) ஹிஜாஸின் ஆக்ஷி. ஹிஜாஸ்வாசிகளைச் சார்ந்ததாக விருந்துவரவேண்டு மென்பதோடு ஹிஜாஸ் புனிதபூமியென்னும் முறையில் அதில் இஸ்லாம் உலகத்திற்குரிய உரிமையும் இருந்து வரவேண்டும்.

(1 அ) இஸ்லாம் உலக பிரதிநிதிகளின் செல்வாக்குக் குட்பட்ட ஒருவரைஹிஜாஸின் தலைவராகத் தேர்ந்தெடுத்து ஒருகுறிப்பிட்டகாலத்திற்குப் பிறகு எங்களிடம் அடமானமாக விருக்கும் இத்தேசம் அவ்வதிகாரியிடம் சட்டவரம்பின்படி ஒப்புவிக்கப்படவேண்டும்.

(1 ஆ) ஹிஜாஸ் எல்லாமுஸ்லிம்களினுடையவும் இஸ்லாம் ஸம்பந்தமான பரிசுத்த நடுநாயக ஸ்தலமாக இருந்துவரவேண்டும்.

(2) ஹிஜாஸின் ஆக்ஷி உள்நாட்டைப் பொருத்தவரை சுயேச்சையுள்ளதாக விருக்கும். ஆனால் இவ்வாக்ஷி எத்தேசத்திற்கும் விரோ

தமாய் யுத்தவிளம்பரம் செய்யக்கூடாது. ஆகவே இதற்குரிய சட்ட திட்டங்களை இயற்றுவது அவசியமாகும்.

(3) ஹிஜாஸின் ஆக்ஷி இதர ஆக்ஷிகளோடு எத்தகைய ராஜீய உடன்படிக்கையும் செய்து கொள்ளக்கூடாது.

(4) ஹிஜாஸின் ஆக்ஷி முஸ்லிமல்லாத அரசாங்கங்களோடு பொருளாதாரத்தை பொட்டிய உடன்படிக்கையைக் கூடச்செய்து கொள்ளக்கூடாது.

(5) முஸ்லிம் உலகப்பிரதிநிதிகள் ஹிஜாஸின் எல்லையை நிர்ன யிக்கவேண்டும். பிரதி நிதிகளின் எண்ணிக்கை நியாயமான முறையைக்கொண்டிருக்க வேண்டும். அஃதாவது:—முஸ்லிம் உலகத்தைச் சார்ந்த இஸ்லாமிய அரசாங்கங்களுக்கும் அரபிய அரசாங்கங்களுக்கும் முஸ்லிம் உலகத்தில் இருந்துவரும் அந்தஸ்திற்கேற்ப அவைகளுக்குப் பிரதிநிதி ஸ்தானங்கள் அளிக்கப்படவேண்டும். மேலும் "அகில இந்திய கிலாபத் கமிட்டி" "அகில இந்திய ஜம்இய்யத்துல் உலமா" "அஹ்லெஹதீது" ஆகிய மூன்று சபைகளுக்கு மூன்று பிரதிநிதிகள் அங்கீகரிக்கப்படவேண்டும்.

இந்தியாவைப் பொருத்தவரையில் மூன்று பிரதிநிதிகளை ஏற்றுக்கொள்ளவெண்டுமென்று சுல்லான் அவர்கள் கூறியுள்ள அபிப்பிராயத்தில் பல நம்பிக்கைகள் இருந்து வருகின்றன. இந்தியாவில் கிலாபத் இயக்கம் ஏற்படாது போயின், இந்தியாவில் கிலாபத்துக் கமிட்டி இல்லாதபோயின் இக்கமிட்டி இலாபத்துக் கிளர்ச்சியை நடத்தாது போயின் நிலைமை இவ்வாறன்றி வேறு விதமாக விருக்குமென்று கூறலாம். ஆகவே கிலாபத் இயக்கத்தை ஆரம்பித்ததலைவர்களுக்கு இந்திய முஸ்லிம்கள் நன்றிநிறைவேற்றக்கடமைப்பட்டிருக்கின்றனர். மேலும் சுல்தான் இப்னு சு ஊத் அவர்களின் இவ்வரிய லக்ஷியங்கள் ஈடேறும் பொருட்டு இந்திய முஸ்லிம்களும் மற்றதேச முஸ்லிம்களும் ஒத்துழைக்கமாட்டார்களா?

———

24/4/96

